கடைசியாக அவன் துணிகள்
உண்மையாகவே சுத்தமா
கவும் வெண்மையாகவும்
இருக்கின்றன

அது ஸன்லைட்
டினால் தான்!

ஸன்லைட்
சோப்

SUNLIGHT SOAP

## தைக்கும் இந்த மோவாய்க் கட்டையினால் அதிகச் செலவு ஏற்படுகிறது

அநேக மனிதர்கள் ஏழு நாட்களில் நான்கு நாட்கள் க்ஷவரம் செய்துகொள்ளுவதில்லை. அவர்களுக்கு ஒரு வாரத்தில் மூன்று தடவைகளுக்கு மேல் நாவிதனை அழைப்பது சாத்தியமில்லை. இதற்கே குறைந்தது ஆறு அணுக்கள் செலவாகும். ஆறு அணுக்கள் செலவுசெய்வதே அதிகம் தான். அவ்வாறு செலவுசெய்தாலும் க்ஷவரம் செய்துகொள்ளாத நாட்களில் தைக்கும் மோவாய்க்கட்டை பொறுக்க வேண்டியதுதான்.

## இந்த மிருதுவான மோவாய்க் கட்டைக்கு குறைந்த செலவு!

நீங்கள் 7 ஓ' க்ளாக் பிளேடுகளால் க்ஷவரம் செய்துகொள்ளுவீர்களேயானால், வாரத்தில் ஒவ்வொரு நாளும் மிருதுவான மோவாய்க் கட்டையை உடைத்தாயிருப்பதுடன் பணத்தையும் மிச்சப்படுத்துவீர்கள். ஐந்து பிளேடுகளடங்கிய ஒரு பாக்கெட்டின் விலை அணா 6—நாவிதன் செய்யும் மூன்று க்ஷவரங்களின் கிரயத்துக்குச் சரியானது--ஒரே பாக்கெட்டிலுள்ள உண்மையாகவே கூருள்ள பிளேடுகளால் நீங்கள் பல வாரங்கள் க்ஷவரம் செய்துகொள்ளலாம்.

மார்க்கெட்டில் 7 ஓ. க்ளாக் பிளேடுகள்தான் மிகச் சிறந்தவை. நல்ல கூருள்ளவை—உயர்ந்த எஃகினால் மும்முறை சாணை தீட்டப்பெற்றவை. பணம் கொடுத்து வாங்குவதற்குத் தகுதியான மிகச்சிறந்த பிளேடுகள்.

**தினந்தோறும் 7 ஓ க்ளாக் பிளேடுகளால் க்ஷவரம் செய்துகொள்ளுங்கள்.**







குறைந்த செலவில் அதிக க்ஷவரங்கள் அளிக்கும் பிளேடுகள்

5 பிளேடுகளடங்கிய ஒரு பாக்கெட்டுக்கு அணா 6

# சரும ரோக உபத்திரவம்

## உடனே தீருகிறது



"நான் ஒரு நர்ஸ். ஒரு நாள், சரும உபாதையால் பேரவதிப் பட்டுக் கொண்டிருந்த தீராத ஆஸ்துமா நோயாளி ஒருவருக்கு நான் சமீபத்தில் சிகிச்சை செய்தேன். அவருக்கு ஏற்பட்ட நமைச்சலைத் தடுத்து நிறுத்துவதற்கு என்ன செய்வதென்று தெரியாமல் தவித்தேன். வல்டெர்மா விளம்பரம் செய்யப் பட்டிருந்ததைக் கவனித்தேன். ஏதும் நம்பிக்கையில்லாமல்தான் ஒரு ஜாடியை வாங்கி உபயோகித்தேன்; ஆனால் ஆச்சரியப்படத் தக்க பலன் கிட்டியது. நமைச்சல் உடனே அடங்கி விட்டது. இரண்டு ஜாடிகள் உபயோகித்தவுடனேயே இரத்தம்போலச் சிவந்திருந்த சருமம் மென்மை யடைந்தது."

மிஸ்டர் F. E., லண்டன்

### இருவித கிருமிநாசன சக்தி

வல்டெர்மாவின் இருவித கிருமி நாசன சக்தியால் எக்ஸிமா, படை, கொப்புளங்கள், சொறிப்பு, பருக்கள் முதலியவைகள், ஒழிந்து போகின்றன என்னும் உண்மையை லொகித்து நன்றியைத் தெரிவித்துக் கொள்ளும் முறையில் வந்து குவியும் ஆயிரக் கணக்கான கடிதங்களே உறுதிப் படுத்துகின்றன. வல்டெர்மா சரும சிகிச்சைக்கு விசேஷமான களிம்பு. அதன் இருவித கிருமி நாசன சக்திகளும்—ஒவ்வொன்றும் பலவித கொடிய கிருமிகளின் சத்துரு—பலவித சரும வியாதிகளை தோற்றுவிக்க மூலகாரணமாகும் வெவ்வேறுவித கிருமிகளை அடியோடு அழித்து விடுகிறது. நமைச்சலைத் தீர்த்து விஷத்தை வெளியேற்றி விடுகிறது. நீர் எண்ணெய்ச் சேர்க்கை என்னும் அடிப்படையின் அபூர்வ சக்திக்கு நாம் நன்றி செலுத்துவோம்! மீண்டும் நோய் தொற்றிவிட முடியாது. காயங்களும், சொறிப்பும் விரைவில் ஆறி விடுகின்றன. வெண்மையான, பிசுக்கற்ற வல்டெர்மா பூசின இடத்தில் புலனாகாது. எந்த நேரத்திலும் தேகத்தில் எந்த இடத்திலும் உபயோகிக்கலாம். எல்லா சிறந்த கெமிஸ்டுகளிடத்திலும் மருந்து வியாபாரிகளிடமும் கிடைக்கும்.

இந்தியாவின் பூரா விநியோகஸ்தர்கள்:
ஜெப்ரே மானர்ஸ் & கோ., லிமிடெட்
பம்பாய் — கல்கத்தா — டில்லி — மதராஸ்




DOUBLE-ANTISEPTIC
**Valderma**
THE *Non-Greasy* BALM



# விற்பனையாளர் கால்வலியினல் முடமானர்



## பின்பு 'க்ரூஷன்' அதன்வினைவை வெற்றிகரமாகத் தாக்கியது

விற்பனையாளர் காந்தி ரேமக் நாட்டுப் பிரயாணத்தினின்று திரும்பியபோது அவரை ரயிலினின்று தூக்கி வர வேண்டியதாயிற்று. மறுபடியும் வேதனை உண்டாக்கும் கால் வலி அவரை அறிவிரைவில் பிடித்தது. சில நாட்கள் கழிந்து எல்லாரேறு காரியாலயத்தை அடைந்து மானேஜரைக் கண்டு அவர் ராஜிநாமாக் கொடுத்தார்......

ஆறு மாதங்களுக்குப் பின்: என்ன மாறுதல். அதிக விற்பனையின் காரணமாக காந்தி கால் வருடப் பரிசைப் பெற்றுவிட்டார். அவரது சகாக்கள் தங்கள் சந்தோஷத்தைத் தெரிவிக்க அவரைச் சூழ்ந்து கொண்டனர். "உங்கள் ரகசியம் என்ன" என்று அவர்கள் கேட்டனர்.

"தினம் காலை உண்டிக்கு முன் "க்ரூஷன்" சாப்பிடுவதுதான்" அவர் கொடுத்த பதில்.

கால்வலி உபத்திரவம், நரம்புத் தளர்ச்சி இவைகள் சுத்தமற்ற ரத்த ஓட்டத்தின் அறிகுறி. அவைகள் ரத்தத்தில் விஷம் கலந்திருப்பதைக் காண்பிக்கின்றன. 'க்ரூஷன்' ஆறுவித இயற்கை உப்புகளின் சேர்க்கையாதலால் உட் சுத்தத்தை உறுதியாக்கி ரத்த ஓட்டத்தை சுப்புரவாக்குகிறது. புதிய பலத்துடன் சுத்தம் செய்யப்பட்ட நீங்கள் புது வீரத்துடன் பரிணமிக்கிறீர்கள். பின்பு கால்வலி நரம்புத் தளர்ச்சி சம்பந்தப்பட்ட நோய்கள் உங்களை விட்டுச் செல்கின்றன.

இன்றே 'க்ரூஷன்' வாங்குங்கள் கெமிஸ்டுகளிடமும் வியாபாரிகளிடமும் எங்கும் கிடைக்கும் விலை ரூ. 1-10 (மஞ்சள் பெட்டியில்)




## நீங்கள் கூட அந்த 'க்ரூஷன்' உணர்ச்சியை அடையலாம்




மலர் 8 } தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் இதழ் 21

# என்ன செய்தி?

## வாழ்க நிபுணர்கள்!

சென்னை நகர வாசிகள் தற்போது அருந்தி வரும் சுகந்த பரிமள குழாய்த் தண்ணீரைக் குறித்து ஆராய்ச்சி செய்ய மற்றொரு 'நிபுணர்கள் கமிட்டி'யைச் சென்னை சர்க்கார் அமைத்திருக்கிறார்களாம். முன்னொரு தடவை இதே மாதிரி ஒரு நிபுணர் கமிட்டி கூடியது. அக்கமிட்டியிலிருந்த ஏழு நிபுணர்களும் ஏழு விதமாக அபிப்பிராயப் பட்டபடியால் ஒரு முடிவுக்கும் வராமல் கமிட்டி கலைந்துவிட நேர்ந்தது!

மொத்தத்தில் நம் நாட்டில் 'நிபுணர்கள்' என்று பெயர் பெற்றவர்கள் ஏட்டுச் சுரைக்காய் நிபுணர்கள் என்பதற்குச் சென்னைக் கார்ப்பொரேஷன் குழாய்த் தண்ணீர் சிறந்த அத்தாட்சியாகும். சில காலத்துக்கு முன்புவரை குழாய்த் தண்ணீரின் துர்வாசனைக்கு மழையின் பேரில் பாரத்தைப் போட்டு வந்தார்கள். "மழை பெய்யாதபடியால் ஏரியில் தண்ணீர் குறைந்து விட்டது. ஏரியில் தண்ணீர் குறைந்தபடியால் அடியிலுள்ள பாசியும் பூண்டுகளும் அழுகித் துர்வாசனை ஏற்படுகிறது!" என்று சொன்னார்கள். இதை ஆதாரமாகக் கொண்டு ஏராளமான பாஷாண மருந்தைக் கொண்டுபோய்ப் புழலேரியில் கொட்டினார்கள். ஆனாலும் தண்ணீரின் துர்வாசனை என்னமோ குறையவில்லை. ஆனால் மேற்படி காரணம் சுத்த ஹம்பக் என்று ஏரிக்கு நேரில் போய்ப் பார்த்துவிட்டு வந்தவர்கள் சொன்னார்கள். ஏரியில் ஏரித் தண்ணீரை நேரே எடுத்து முகர்ந்தால் கொஞ்சங்கூடத் துர்வாசனை கிடையாது. ஆகவே ஏரியைவிட்டுத் தண்ணீர் கிளம்பிய பிறகு வழியில் எங்கேயோ துர்வாசனையைப் பெறுகிறது என்று ஏற்பட்டது. அது எந்த இடத்தில், எதனால், என்பதைக் கண்டுபிடித்துத் துர்நாற்றத்தைப் போக்க ஏற்பாடு செய்ய வேண்டும். புதிய நிபுணர்கள் கமிட்டி என்ன யோசனை சொல்லப் போகிறது என்பதைச் சென்னை நகர வாசிகள் மிக்க ஆர்வத்துடன் எதிர்பார்த்துக் கொண்டிருப்பார்கள்.

## அதிகாரப் பிடிவாதம்

வாத நோய்களுக்குள்ளே அதிகாரப் பிடிவாதம் என்கிற நோய் மிகப் பொல்லாதது. சென்னை சர்க்காரின் மோட்டார் பஸ் அதிகாரிக்கு மேற்படி நோய் பிடித்திருக்கிறது. "மூர்க்கரும் முதலையும் கொண்டது விடா!" என்னும் பழமொழிக்கு உதாரணமாக அவர் "ஏற்றிய பஸ் விகிதத்தை இறக்க முடியாது!" என்று அடிக்கடி சொல்லிக் கொண்டிருக்கிறார். எத்தனை ஆயிரம் தடவை சொன்னாலும் தவறான காரியம் சரியானதாகி விடாது. பெரிய தொழில்களைப் பொது ஜன சர்க்கார் எடுத்து நடத்தவேண்டும் என்னும் கொள்கையைத் தீவிரமாகக் கைக்கொண்டவர்கள் இந்த அதிகாரப் பிடிவாதத்தைக் குறித்துப் பெரிதும் வருந்துவார்கள். தொழில்களைச் சர்க்கார் எடுத்து நடத்தினால் பொது ஜனங்களுக்கு நன்மை என்ற எண்ணத்துக்குப் பதிலாக, "சர்க்காரிடம் தொழில்கள் வந்தால் பொது ஜனங்களுக்கு ஆபத்து" என்ற எண்ணம் பரவுவதற்குச் சென்னை பஸ் அதிகாரியின் மூர்க்கப் பிடிவாதம் காரணமாகிறது. "உணர்ச்சியற்ற இயந்திரங்களைப் போல் இயங்கும் சர்க்கார் அதிகாரிகளிடம் ஏற்கனவே பொது மக்கள் அகப்பட்டுக்கொண்டு திணறுவது போதாதா? தொழில்களையும் அவர்களிடம் கொடுத்துவிட்டுத் திண்டாட வேண்டுமா? நரிக்கு அதிகாரம் கொடுத்தால் கிடைக்கு இரண்டு ஆடு கேட்குமே!"

என்று சென்னை மக்கள் பேசிக் கொள்ள நேர்ந்திருக்கிறது. இத்தகைய அபகீர்த்தி சென்னை சர்க்காருக்கு ஏற்படாதிருக்கும் பொருட்டுப் பஸ் பிரயாணிகள் சங்கத் தலைவர் ஸ்ரீ ஆர். ஆர். தனவாய் மிக்க பிரயாசை எடுத்து, பஸ் விகிதங்களைப் பற்றிய ஓர் அறிக்கை அச்சிட்டு வெளியிட்டிருக்கிறார். இதில் பழைய விகிதங்கள், சர்க்கார் தூக்கியிருக்கிறபடி புதிய விகிதங்கள், நியாயமாக நிர்ணயிக்கப்பட வேண்டிய விகிதங்கள் ஆகிய மூன்று வகைகளையும் வெவ்வேறு வர்ண மையில் அச்சிட்டிருக்கிறார். ஆனால், எவ்வளவு பிரகாசமான வர்ண மையில் அச்சிட்டபோதிலும், கண்ணை இறுக மூடிக்கொண்டு உண்மையைப் பார்க்க மறுக்கும் சர்க்கார் அதிகாரியின் குருட்டுப் பிடிவாதத்தை என்ன செய்ய முடியும்? காங்கிரஸ் மந்திரிகள் பொதுஜன அபிப்பிராயம் என்பது ஒன்று இருக்கிறதை உணர்ந்து கண் திறந்து பார்த்தால், ஸ்ரீ தனவாய் கொடுத்திருக்கும் நியாயமான விகிதங்களை ஒப்புக்கொண்டே தீர வேண்டும்.



## கலைக் களஞ்சியம்

டிசம்பர் 12ஆ மாலை சென்னைச் சர்வ கலாசாலைக் கட்டிடத்தில் ஒரு முக்கியமான இனிய நிகழ்ச்சி நடைபெற்றது. ஆங்கிலம் முதலிய பாஷைகளில் உள்ள 'என்ஸைக்ளோப்பீடியா'வைப் போல் தமிழ் மொழியில் சகல அறிவாராய்ச்சி முடிவுகளையும் சுருக்கமாகவும் விளக்கமாகவும் தரும் "கலைக் களஞ்சியம்" தயாரிப்பதற்குத் தமிழ் வளர்ச்சிக் கழகத்தார் ஆரம்பித்துள்ள முயற்சியைப் பற்றி நேயர்கள் அறிவார்கள். சென்ற வருஷம் விஜயதசமியன்று இந்தத் திருப்பணிக்கு ஆரம்ப விழா நடந்தது. சென்ற ஞாயிற்றுக்கிழமை மாலை தமிழன்பர்களும் பத்திரிகைப் பிரதிநிதிகளும் கூடியிருந்த சபையில் "கலைக் களஞ்சியம்" மாதிரி இதழ் அரங்கேற்றப் பட்டது. எல்லாவிதமான அறிவுக் கலைகளையும் அழகுக் கலைகளையும் ஆத்மிக உண்மைகளையும் தன்னுள் கொண்ட "கலைக் களஞ்சியம்" எத்தகைய அபூர்வமான பொக்கிஷமாயிருக்கும் என்பதற்கு இப்போது வெளியிட்டிருக்கும் மாதிரி இதழ் சிறந்த அத்தாட்சியாக விளங்குகிறது. சிற்பம், சித்திரம், சமயம், விஞ்ஞானம், சமூகம், அரசியல் ஆகிய எல்லாத் துறைகளும் இருபது பக்கத்துக்குள்ளே இடம் பெற்றிருக்கின்றன. பல அறிஞர்களிடமும் நிபுணர்களிடமும் கட்டுரைகள் பெற்று ஒவ்வொன்றிலும் ஒரு சிறு பகுதி எடுத்துத் தமிழ் நடையைத் தெளிவு படுத்தி கடினமான விஷயங்களைக்கூட அனைவரும் அறிந்துகொள்ளும் முறையில் இந்தக் "கலைக் களஞ்சிய" மாதிரி இதழைத் தயாரித்து வெளியிட்டிருக்கிறார்கள். விஷயத்தை விளக்குவதற்குரிய சித்திரப் படங்கள் ஏராளமாயிருக்கின்றன. மிகச் சுருக்கமான காலத்தில் இந்த அரும் பணியைச் செய்து முடித்த "கலைக் களஞ்சிய" ஆசிரியர் ஸ்ரீ எம். பி. பெரியசாமி (தூரன்) அவர்களையும், துணை ஆசிரியர் ஸ்ரீ பெ. திரிகூடசுந்தரம் பிள்ளை அவர்களையும் பாராட்டுகிறோம். இந்தப் பெரிய திருப்பணிக்குப் பின் பலமாயிருந்து ஊக்கமளித்துத் திறமையுடன் நடத்தி வருகிறவர் கல்வி மந்திரி ஸ்ரீ அவிநாசிலிங்கம் என்பது அனைவரும் அறிந்ததே. இப்போது வெளியாகியுள்ள மாதிரிப் பிரதியைப் போலவே பன்னிரண்டு முழுப் புத்தகங்களும் வெளி வந்துவிடுமானால் தமிழ் மொழிக்கு இணையில்லாத தொண்டாக விளங்கும் என்பதில் ஐயமில்லை. தமிழ் அன்பர்களும் தமிழ் நாட்டிலுள்ள புத்தகசாலை - வாசகசாலைகளும் இப்போதே கலைக்களஞ்சியப் பிரதிகளுக்குத் தங்களுடைய பெயர்களைப் பதிவு செய்து கொள்ளக் கோருகிறோம்.

## "ஹிந்துஸ்தான்" ராஜாஜி மலர்

சென்ற வருஷம் டிசம்பர் மாதத்தில் தமிழ்நாடெங்கும் ராஜாஜி தினம் மிகச் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. இந்த வருஷத்தில் ராஜாஜியின் விருப்பத்தை முன்னிட்டுப் பிறந்த தினம் கொண்டாடும் திட்டம் கைவிடப் பட்டது. அந்தக் குறையை நீக்கும்படியாக "ஹிந்துஸ்தான்" பத்திரிகையின் ராஜாஜி மலர் மிக அற்புதமான முறையில் வெளியிடப் பட்டிருக்கிறது. ராஜாஜியைப் பற்றிப் பல அபூர்வமான கட்டுரைகளும் படங்களும் மலரை அலங்கரிக்கின்றன. கட்டுரையாளர்கள் ராஜாஜியின் மீது அன்பு மலர்களைச் சொரிந்திருக்கிறார்கள். புதுச்சேரி அரவிந்த ஆசிரமத்தைச் சேர்ந்த ஸ்ரீ கே. எஸ். வெங்கடராமன் பி. ஏ. பி. எல். அவர்கள் ராஜாஜி அரசியலில் பிரவேசித்த காட்களைப் பற்றிய சில அருமையான அநுபவங்களைப் பற்றி நயமாக எழுதியிருக்கிறார். "ஹிந்துஸ்தான்" பத்திரிகையின் ஆசிரியர் குழுவையும் நிர்வாகிகளையும் பாராட்டுகிறோம்.

# அமரர் ஏற்றிய அகண்ட ஜோதி!

பல பல ஆண்டுகள் வரை போராடிய பின் பாரத புண்ணியபூமி பெறுதற்கரிய சுதந்திரத்தைப் பெற்றதால், கோடிக் கணக்கான மக்களின் வாழ்வில் கிடைத்த அந்த மகோன்னதமான வெற்றியையே ஜே ஹிந்த்! என்ற தேசிய மகா மந்திரம் குறிப்பிடுகிறது.

அதேபோன்று, இந்திய தேசிய மகா சபையான காங்கிரஸின் மகத்தான வெற்றியைக்குறிப்பிடுவதுபோல், இந்த வருஷத்தில் அம் மகாசபை கூடும் நகரின் பெயரும் ஜெயபுரி என்று அமைந்திருப்பது எவ்வளவு பொருத்தமானது பாருங்கள்!

அறுபத்திரண்டு ஆண்டுகளுக்கு முன் விதைக்கப்பெற்ற காங்கிரஸ் முளைவிட்டுச் செடியாகி, அடக்குமுறைப் புயலுக்கெல்லாம் ஆடி அசைந்து கொடுத்துவிட்டு, மகா விருட்சம் ஆகியது.

எவ்வகைப் பூச்சிகளாலும் புல்லுருவிகளாலும் அந்த விருட்சத்தின் வளர்ச்சியைத் தடுக்க முடியவில்லை.

எத்தகைய இன்னல்களையும் சமாளித்துக்கொண்டு அது வளர்ந்தது; வளர்ந்தது மட்டுமல்ல, முப்பதுகோடி மக்களுக்கு நிழலையும் கொடுத்தது; நிழலைக் கொடுத்தது மாத்திரமல்ல, பலனையும் கொடுத்தது; கொடுத்த பலனைப் பாதுகாக்கவும் இப்போது பாடுபட முற்பட்டிருக்கிறது.

இன்று அதன் ஆணிவேர் பாதாள உலகம் வரையிலும் பாய்ந்திருக்கிறது; அதன் கிளைகள் ஆகாசமளாவி அகன்று விரிந்து அஷ்ட திக்குகளிலும் வியாபித்து நிற்கின்றன.

எனவே, இனி அதை எத்தகைய சண்டமாருதத்தினாலும் சிதைக்க முடியாது. அதன் புகழைக் காலதேவனாலும் அழிக்கமுடியாது.

• • •

இந்திய மகாஜனங்கள் வேண்டி நின்ற வீர சுதந்திரத்தை ஈட்டிய அந்தக் கற்பக விருட்சத்தின் காரண கர்த்தா எங்கே? எங்கே? என்று இத்தச் சந்தர்ப்பத்தில் எல்லோருடைய மனமும் ஏங்குவது இயல்பே.

இந்த உலகில் எந்தக் காரியத்தை நிறைவேற்றுவதற்காக அவதார மூர்த்திகள் தோன்றுகின்றனரோ, அந்தக் காரியம் நிறைவேறிய பின் அவர்கள் மறைந்துவிடுவது வேதகாலம் தொட்டு வழக்கமாக இருந்து வருகிறது.

அணுவளவும் குற்றம் குறை இல்லாத நல்வழியை உலகத்துக்குக் காட்டிய ராமபிரானின் அவதாரம் இராவணனை வதம் செய்து சீதா தேவியை மீட்டதுடன் முடிவடைந்தது.

கீதோபதேசம் செய்து, கௌரவரை வதைத்ததுடன் கிருஷ்ணாவதாரம் முடிந்தது.

கொடிய ஆயுத வழியில் ஈடுபட்டு அல்லலுறும் உலகத்துக்கு மிகவும் அற்புதமான சாத்துவிக வழியை உபதேசித்து, ஏகாதிபத்திய அரக்களிடமிருந்து சுதந்திர தேவியை மீட்டதுடன் காந்தி அவதாரமும் முடிந்தது.

அதற்குமேல் காந்தி மகானின் ஸ்தூல உடலைத் தாங்கும் பாக்கியம் இந்தப் பூமிக்குக் கிடைக்கவில்லை. அவரைத் தரிசிக்கும் புண்ணியத்தை மனித வர்க்கம் செய்யவில்லை.

எனினும் அந்த மகான் ஏற்றி வைத்த சுதந்திர மணிவிளக்கை நாமும், நமது சந்ததிகளும், சந்ததிகளின் சந்ததிகளும் கற்பகோடி காலத்துக்குத் தரிசித்து வரலாம்!

இன்று ஜெயபுரி காங்கிரஸில் சுடர்விட்டெரியும் அந்த அகண்ட ஜோதியின் பிரகாசம் என்றென்றும் குன்றாது காத்து வரவேண்டியது பாரத நாட்டு மக்களின் கடமை.

• • •

இந்த வருஷம் காங்கிரஸ் மகா சபைக் கூட்டத்தின் ஒரு விசேஷ அம்சம் என்னவெனில், இந்தியா சுதந்திரம் பெற்ற பின் இதுதான் முதலாவது கூட்டம் என்பதுடன் ஓர் இந்திய சமஸ்தானத்தில் காங்கிரஸ் கூடுவதும் அதன் (காங்கிரஸின்) சரித்திரத்திலேயே இதுதான் முதல் தடவையாகும்.

இந்தியாவின் சுதந்திரச் சுடர் பிரகாசம் குன்றாதிருக்கும் வழியையே இவ்

வருஷத்திய காங்கிரஸ் தீர்மானங்கள் காட்டுகின்றன.

இந்தியாவின் தந்தை காந்தி மகாஜிக்கு நன்றி செலுத்தி, பாரத நாட்டு மக்களின் வணக்கத்தைத் தெரிவிப்பதே முதலாவது தீர்மானம் ஆகும்.

பெற்ற சுதந்திரத்தைப் பாதுகாப்பதற்கான முறைகளை மற்ற தீர்மானங்கள் வலியுறுத்துகின்றன.

சுதந்திரம் பெறுவதற்கு முன் ஜனங்களிடையே நிலவிய தியாக புத்தியும், ஒற்றுமையும், உறுதியும் பெற்ற சுதந்திரத்தைப் பாதுகாப்பதிலும், நாட்டில் சுபிட்சம் ஏற்படும்படி செய்வதிலும் அத்தியாவசியம் என்று நமது தலைவர்கள் அடிக்கடி கூறுவதைக் காங்கிரஸ் மறுபடியும் வற்புறுத்துகிறது.

* * *

இந்தியாவில் ஜாதி, சமய, மத, வர்க்க பேதமற்ற ஜனநாயக சமுதாயத்தை ஸ்தாபிக்க வேண்டும்.

தேசத்தில் எழும் நெருக்கடிகளையும் சர்வ தேச நெருக்கடிகளையும் காந்திஜியின் உபதேசத்துக்கு ஹானியின்றி சமாளிக்க வேண்டும்.

பாரத நாட்டைப் பிளந்து அவதார மூர்த்தியையும் கொலை கொண்ட,-இந்தியாவின் சுதந்திரத்துக்குப் பரம விரோதியான,-தேசத்தின் பெருமைக்கும் புகழுக்கும் பெரும் களங்கத்தை உண்டு பண்ணிய,—தேசமக்களுக்குச் சகிக்க முடியாத கஷ்ட நஷ்டங்களுக்குக் காரணமான வகுப்பு வெறியை வேருடன் களைந்தெறிய வேண்டும்.

இந்தியாவில் இன்னும் சுதந்திரம் பெறாமல் அன்னியரின் ஆதிக்கத்திலுள்ள பிரதேசங்கள் இந்தியாவுடன் ஐக்கியம் ஆக வேண்டும். அது தான் உலக நீதிக்கும் ஜனநாயகத்துக்கும் உகந்தது. சம்பந்தப்பட்ட அரசாங்கங்களுடன் சிநேக பாவமான ஒத்துழைப்புடனும் சமாதானமாகவும் அத்தகைய மாறுதல் ஏற்படுமாறு செய்யவேண்டும்.

மானிட வர்க்கத்தின் விரோதிகளான பாசிஸ முறை, ஏகாதிபத்தியம், காலனிக் கொள்கை முதலியவற்றைக் காங்கிரஸ் எப்போதுமே எதிர்த்து வந்திருக்கிறது. எனவே இனியும் அவற்றை எதிர்த்து உலக சமாதானத்துக்காகவும், உலக நாடுகளின் சுதந்திரத்துக்காகவும் பாடுபடுவதே இந்தியாவின் வெளிநாட்டுக் கொள்கையாக இருக்க வேண்டும்.

உலக சமாதானத்தை அடிப்படையாகக் கொண்டுள்ள ஐக்கிய நாடுகள் சபையை இந்தியா பரிபூரணமாக ஆதரிக்கிறது.

இவற்றைத் தவிர பிரிட்டன்-இந்தியா எதிர்கால உறவு, அகதிகளின் பாதுகாப்பு முதலியவை பற்றியும் சில தீர்மானங்கள் தேச மக்களுக்கு வழி காட்டுகின்றன.

தேசத்தில் பொருளாதார சுபிட்சம் ஏற்படுவதற்கான முறைகளும் ஒரு தீர்மானத்தில் சாங்கோபாங்கமாகக் குறிப்பிடப் பட்டிருக்கின்றன.

* * *

இந்திய சுதந்திரத்துக்காகப் போராடிக் கொண்டிருந்தபோதும் சரி, சுதந்திரம் பெற்ற பின்னரும் சரி, தொழிலாளர்களைக் காங்கிரஸ் மறக்கவில்லை.

முப்பது வருஷங்களுக்கு முன் ஆமதாபாத்தில் ஏற்பட்ட தொழிலாளர் தகராறில் மகாத்மா காந்தி தலையிட்டு நிரந்தரமான சமரசத்தை நிலைநிறுத்தியது பிரசித்தி பெற்ற விஷயமாகும்.

தவிர, இன்று இந்தியாவில் வளர்ச்சி பெற்றுள்ள தொழிலாளர் சங்கங்களின் ஆதிகர்த்தாக்கள் காங்கிரஸ் வாதிகளேயன்றி வேறெவரும் இல்லை என்பதைச் சகலரும் உணர வேண்டும்.

சுதந்திர இந்திய சர்க்கார் ஏற்பட்ட சில மாதங்களுக்குள்ளாகவே தொழிலாளர்களின் நன்மைக்கான பல முறைகள் கைக்கொள்ளப்பட்டிருக்கின்றன; பல சட்டங்களும் நிறைவேறியிருக்கின்றன.

பாரபட்ச மற்றவர்களும், போலிப் பிரசாரத்தினால் ஏமாறுதலவர்களும் மேற்படி உண்மையை ஒப்புக் கொள்வார்கள்.

தொழிலாளர்களுக்கு நியாயமான சம்பளத்தை நிர்ணயிப்பதுடன், லாபத்திலும் பங்கு கிடைப்பதற்கான முறைகளைக் கைக்கொள்ள வேண்டும் என்று ஒரு தீர்மானம் இந்திய சர்க்காரையும் மாகாண சர்க்கார்களையும் கேட்டுக் கொள்கிறது.

இவ்வாறாக, சுதந்திரம் பெற்ற பின்னரும் தேச மக்களுக்கு வழி காட்டும் காங்கிரஸுக்குப் பூரண ஆதரவு அளிப்பதன் மூலம் மகாத்மா காந்திக்கு நன்றி செலுத்த வேண்டியதும், அந்த அமரர் ஏற்றிய அகண்ட ஜோதியைப் பாதுகாத்து வரவேண்டியதும் மக்களின் முழு முதற் கடமை அல்லவா?



## பளுவைக் குறையுங்கள்

வீங்கிய மதிப்புப் பணம் வெற்றுப் பாரம்தான். பணப் பளுவைக் குறைக்க செலவைத் தவிர்த்து பணத்தை மிதப் படுத்திச் சேமியுங்கள்.

சுலபமான புத்திசாலித்தனமான சேமிப்பு ஆயுள் இன்ஷ்யூரென்ஸ்தான். இன்றைய பாலிஸி, நாளைய பலமான பாதுகாப்பு.

உங்கள் தேவைக்கான பிருத்வி பாலிஸி தயார். இன்றே பிருத்வியை நாடுங்கள்.

# பிருத்வி இன்ஷ்யூரென்ஸ்
## கம்பெனி லிமிடெட்

**பிருத்வி மியூச்சுவல் பிராவிடெண்ட்**
**கம்பெனி லிமிடெட்**

*12, அங்கப்ப நாயகன் தெரு :: மதராஸ்*

# உயிரையும் கொடுப்பார்கள்!

மகா கவி பாரதியார் தமது தீர்க்க தரிசன சக்தியினால் யாரும் காணாத பல காட்சிகளைக் கண்டார். பாரதத் தாயின் மணிக் கொடி—இந்தியா தேசத்தின் சுதந்திரக் கொடி—வானளாவிப் பறப்பதை அவர் பார்த்தார். அந்த மணிக்கொடியைத் தாங்கிய கம்பத்தைச் சுற்றி அகில இந்தியாவையும் சேர்ந்த வீரர்கள் அணிவகுத்து நிற்பதைப் பார்த்தார். அந்த வீரர்கள் எப்பேர்ப்பட்டவர்கள் என்பதையும் ஞானக் கண்ணினால் கண்டறிந்தார். "ஆகா! இவர்கள் எத்தகைய வீராதி வீரர்கள்! தாயின் மணிக் கொடியைக் காப்பதற்காகத் தங்கள் உயிரையும் கொடுக்கக் கூடியவர்கள் அல்லவா?" என்று வியந்தார். அந்த வியப்பிலே பாடினார் :—

"கம்பத்தின் கீழ்நிற்றல் காணீர்!—எங்கும்
காணரும் வீரர் பெருந்திருக்கூட்டம்
நம்பற்கு உரியர் அவ்வீரர்—தங்கள்
நல்லுயிர் ஈந்தும் கொடியினைக் காப்பார்!"

இத்தகைய வீரர்களைப் பொதுப்படையாகப் பார்த்ததோடு பாரதியார் திருப்தியடைந்து விடவில்லை. மேலும் நன்றாக உற்றுப் பார்த்து அவர்கள் இந்தியா தேசத்தின் எந்தெந்தப் பகுதியிலிருந்து வந்தவர்கள் என்பதைத் தெரிந்து கொண்டார். தெரிந்து கொண்டு பெருமிதத்தோடு அவர்களையெல்லாம் வர்ணித்தார் :—"ஆகா! எங்கெங்கிருந்தெல்லாம் இந்த மகா வீரர்கள் வந்திருக்கிறார்கள்! இதோ செந்தமிழ்நாட்டு வீரர்கள்! இதோ சிந்தை துணிந்த தெலுங்கர்கள்! அதோ, காலனும் அஞ்சப் போரில் கலக்கும் மராட்டியர்கள்! அங்கே, அடாடா! அந்த ஆஜானுபாஹுக்கள் யார்? பார்த்தனும் பீமனும் வாழ்ந்த பாஞ்சால நாட்டார் அல்லவா? இதோ நிற்பவர்கள், சாகும் போதுகூடத் தாயின் சேவையை மறவாத வங்க நாட்டுவீரர்கள் அல்லவா?......இப்படி நாட்டின் பல பாகங்களிலிருந்தும் திரண்டு வந்து சுதந்திரக் கொடியைக் காப்பதற்காக அணிவகுத்து நிற்கும் வீரர்களை எப்படிப் பாராட்டுவது? அவர்களுடைய சிந்தையின் வீரம் நிரந்தரம் வாழ்க!" என்று பாரதியார் அழகான தமிழில் பரவசமாக வாழ்த்தி மகிழ்ந்தார்.

மகா கவி பாரதியாரின் திருவாக்கு இன்றைய தினம் பரிபூரணமாகப் பலித்திருப்பதை நாம் காண்கிறோம்.

"வாழ்க பாரதி! வாழ்க நம் மகாகவி!" என்று வாழ்த்தி மகிழ்கிறோம்.

• • •

தற்போது இந்தியாவின் சுதந்திரத்தைப் பாதுகாக்கத் துணிந்து நிற்கும் நமது சொந்த இந்திய சைன்யம், 1947-ம் வருஷம் ஆகஸ்டு மீ 15உ வரையில் பிரிட்டிஷாரின் பரிபூரண ஆதிக்யத்துக்கு உட்பட்ட சைன்யமாயிருந்தது; இந்தியாவை அடக்கி ஒடுக்கி பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்துக்குள் பிணைத்து வைக்கும் சைன்யமாக இருந்தது. பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் நன்மைக்காக பிரிட்டிஷார் நடத்திய போர்களில் ஈடுபட்டுப் போர் செய்து வந்தது.

எனவே, 1947-ம் வருஷம் ஆகஸ்டு மீ 15உ வரையில் இந்திய சைன்யத்தைப் பற்றி இந்திய மக்கள் பெருமை கொள்ளவோ, பாராட்டவோ ஏதுவில்லாமலிருந்தது. இந்திய சைன்யத்தின் காரியங்களைப் பற்றி இந்தியர்கள் ஓரளவு மனம் நொந்து வருந்தவும் இடமிருந்தது.

ஆனாலும் அந்த நாளிலேயே இந்திய சைன்யத்தைப் பற்றி அலட்சியமாகப் பேசுவதையோ, அவதூறு செய்வதையோ நாம் விரும்பவில்லை. அவ்விதம் செய்வது பெருந் தவறு என்று கருதினோம். இது விஷயமாக 1945 ஏப்ரல் 1உ "கல்கி" இதழ் தலையங்கத்தில் எழுதியிருந்ததை நேயர்களுக்கு ஞாபகப்படுத்த விரும்புகிறோம் :—

ஆறு மாசத்திலோ, ஒரு வருஷத்திலோ, அல்லது ஒன்றரை வருஷத்திலேதானே, ஐப்பான் யுத்தம் முடிவடையும் போது மேற்படி தரைப்படை, கடற்படை, ஆகாசப் படை வீரர்களும் அவரவர்களுடைய சொந்த ஊருக்குத் திரும்பி வருவார்கள். அவர்களை நாம் எப்படி வரவேற்கப் போகிறோம்? அவர்களுக்கு எத்தகைய வரவேற்பு அளிப்பது? அவர்களுடைய விஷயத்தில் சென்னை மாகாணப் பொது ஜனங்கள் எவ்வாறு நடந்து கொள்ள வேண்டும்?

உயிருக்குத் துணிந்து போர் முனைக்குச் சென்று திரும்பிய வீரர்கள் என்று அவர்களைப் பாராட்டி வரவேற்கப் போகிறோமா, அல்லது தீர்க்க யோசனையே இல்லாத குறுகிய புத்தியுடைய சில அரசியல் பிரமுகர்கள் சொல்வதைப் போல், 'வயிற்றுச் சோற்று வீரர்கள்' என்றே, 'கூலிப் பட்டாளம்' என்றே சொல்லி, அவர்களையும் அவமதித்து நம்மையும் அவமானப் படுத்திக் கொள்ளப் போகிறோமா?

சைன்யத்தில் சேர்ந்து போர்முனைக்குச் சென்றிருக்கும் நமது வீர சகோதரர்களை 'வயிற்றுச் சோற்றுக்காக'ப் பட்டாளத்தில் சேர்ந்தவர்கள்

என்று சொல்வது அநீதி, அத்துடன் பெரும் மடமை என்று நாம் கருதுகிறோம்.

மூன்றாவது, வயிற்றுப் பாட்டுக்காக யாதொரு தொழிலிலும் ஈடுபடுவதில் எவ்வித இழிவோ, அகௌரவமோ கிடையாது.

இந்தியாவின் நாற்பது கோடி மக்களையும் எடுத்துக் கொண்டு பார்ப்போமானால், மகாத்மா காந்தியையும், ரமண ரிஷியையும் போன்ற ஒரு சில மகான்களைத் தவிர மற்ற 39 கோடியே 99 லட்சத்துச் சொச்சம் பேர் வயிற்றுப் பாட்டுக்காகத் தொழில் செய்கிறவர்களாகவே இருப்பார்கள்.

மாதம் ஆயிரம், இரண்டாயிரம் சம்பளம் வாங்கும் ஐ. ஸி. எஸ். உத்தியோகஸ்தர்கள், ஐயாயிரம் வாங்கும் நீதிபதிகள், டிபுடி கலெக்டர்கள், தாசில்தார்கள், என்ஜினீயர்கள், போலீஸ் அதிகாரிகள் எல்லாரும் வயிற்றுப் பாட்டுக்காகத்தான் சர்க்கார் சேவகம் செய்கிறார்கள். பெரிய பெரிய வக்கீல்கள், டாக்டர்கள், ஆலை முதலாளிகள், வியாபாரிகள், ஆலைத் தொழிலாளிகள், குமாஸ்தாக்கள், ஆசிரியர்கள் (ஏன், பத்திராசிரியர்கள் கூடத்தான்!) இப்படிச் சகலமான பேரும் வயிற்றுப் பாட்டுக்காகத்தான் பாடுபடுகிறார்கள். இன்னும் பொதுஜன சேவைக்காகவே தங்கள் வாழ்நாளை அர்ப்பணம் செய்திருக்கும் சட்ட சபை அங்கத்தினர்களாகிய ஜனப் பிரதிநிதிகளுக்குக்கூட வயிற்றுப் பாட்டைக் கவனிக்க வேண்டியிருக்கிறது. பல மாகாண சட்ட சபை அங்கத்தினர்கள் மாதச் சம்பளம் வாங்கிக் கொண்டார்கள். இந்திய சட்ட சபை அங்கத்தினர்கள் தினம் ஒன்றுக்கு வயிற்றுப் பாட்டுக்காக ரூ. 25/- படி வாங்கிக் கொள்கிறார்கள்.

இப்படி இருக்கும்போது, பட்டாளத்தில் சேருகிறவர்களை மட்டும் 'வயிற்றுச் சோற்று வீரர்' என்று சொல்லி ஏன் அவமதிக்க வேண்டும்?

ஒரு வித்தியாசம் இருக்கிறது. வயிற்றுப் பாட்டுக்காக வேறு சாதாரண தொழில்களில் ஈடுபடுகிறவர்கள் பத்திரமான வேலை செய்கிறார்கள்.

பட்டாளத்தில் சேருகிறவர்களோ, உயிருக்குத் துணிந்து சேருகிறார்கள்.

இவற்றில் எது விசேஷமானது?

பட்டாளத்தில் சேருகிறவர்கள் என்ன நோக்கத்துடன் அதற்காகச் சேர்ந்தாலும், அப்படிச் சேர்வதற்கு நெஞ்சில் ஒரு துணிச்சல் வேண்டும். உயிரைப் பொருட்படுத்தாத தீரம் வேண்டும்.

மேற்படி தீரம், துணிச்சல் எல்லாம் சுதந்திர இந்தியாவின் சுதந்திர சைன்யத்துக்கு உரியவையாயிருந்தால், நன்றாய்த்தானிருக்கும். நம்முடைய சந்தோஷமும் பாராட்டுதலும் பன்மடங்கு அதிகமாய்த்தானிருக்கும். ஆனால், இந்தியா சுதந்திரமடையாததின் பொறுப்பை அவர்கள் தலையிலே மட்டும் போடுவதில் பிரயோஜனமில்லை. அந்த இந்தியாவின் நாற்பது கோடி ஜனங்களும் பொறுப்பாளிகள்.

எனவே, இந்தியா சுதந்திரம் பெறுவதற்காக, இந்திய சைன்யத்தைச் சேர்ந்தவர்களைத் தூஷிப்பதோ, அவமதிப்பதோ பெரும் அநியாயம்.

இவ்விதம் நாம் யுத்தம் நடந்து கொண்டிருந்த காலத்திலேயே எழுதியதன் காரணம், அச்சமயம் இந்திய சைன்யம் பிரிட்டிஷ் ஆதிக்யக் கட்டுப்பாட்டுக்கு உட்பட்டிருந்தாலும் இந்திய சேனா வீரர் ஒவ்வொருவர் உள்ளத்திலும் தேச பக்தியும் சுதந்திர தாகமும் ததும்பிக் கொண்டிருக்கிறது என்னும் நமது உறுதியான நம்பிக்கைதான். இதற்குச் சில அறிகுறிகள் அவ்வப்போது வெளியானதுண்டு.

ஒரு சமயம் நிராயுதபாணிகளான ஜனங்களின் கூட்டத்தின்மீது துப்பாக்கிப் பிரயோகம் செய்யும்படி 'கார்வாலிகள்' என்னும் சைன்யப் பகுதியினரை பிரிட்டிஷ் உத்தியோகஸ்தர்கள் கட்டளையிட்டார்கள். அதைக் கார்வாலி வீரர்கள் மறுத்து அதன் பலனாக ராணுவச் சட்டத்தின்படி தண்டனை பெற்றார்கள்.

அப்புறம், மலாயாவிலும் பர்மாவிலும் நேதாஜி சுபாஷ் சந்திரபோஸ் அமைத்த இந்திய தேசியப் படையின் மகிமையை அறியாதார் யார்? அந்தத் தேசியப் படையில் சேர்ந்தவர்களில் பெரும்பாலோர் இந்திய சைன்யத்தில் இருந்த வீரர்கள்தானே? தேசபக்தியும் சுதந்திரப் பற்றும் இல்லாதவர்களாயிருந்தால், அவ்வாறு நேதாஜியின் தலைமையை ஒப்புக் கொண்டு தேசியப் படையில் சேர இசைந்திருப்பார்களா?

இத்தகைய அறிகுறிகளினால் இந்திய சைன்ய வீரர்களின் பேரில் நாம் கொண்டிருந்த நம்பிக்கை இன்றைய தினம் பரிபூரணமாக நிறைவேறியிருக்கிறது. பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தைப் பாதுகாப்பதற்காக அமைக்கப்பட்டிருந்த இந்திய சைன்யமானது இன்றைய தினம் இந்தியாவின் சுதந்திரத்தைப் பாதுகாப்பதற்கு ஏற்பட்ட தேசிய வீர சைன்யமாக மாறியிருக்கிறது.

1947-ம் வருஷம் ஆகஸ்டு மாதம் 15 தேதிக்குப் பிறகு அதி தீவிரமாக மேற்கண்ட மகத்தான மாறுதல் ஏற்பட்டிருக்கிறது. இந்தியாவின் விரோதிகள் யாராயிருந்தாலும் சரி, எந்தப் பக்கமிருந்து வருகிறவர்களாயிருந்தாலும் சரி, அவர்களை ஹதா ஹதம் செய்ய இந்திய சைன்யம் ஆயத்தமாயிருக்கிறது. ஏன்? ஒரு வேளை பிரிட்டிஷாரே இந்தியாவின் விரோதிகளானால்கூட நமது வீர இந்திய சைன்யம் பிரிட்டிஷாரை எதிர்த்துத் துரத்தி யடிக்கப் பின்வாங்காது.

சுதந்திர இந்தியாவின் சைன்யம் ஏறக்குறைய இந்திய மயமாகி விட்டாலும், இந்

நீனாளும் ஒரே ஒரு குறை இருந்தது. அதாவது, இந்திய சைன்யத்தின் பிரதம சேனாதிபதிப் பதவியை இதுவரை ஜெனரல் பூச்சர் என்னும் ஆங்கிலேயர் வகித்து வந்தார். சைன்யத்தின் தலைமைப் பதவியை அயல் நாட்டார் ஒருவர் வகிக்கும் வரைக்கும், "இந்திய சைன்யம் நம்முடைய சொந்த சைன்யந்தான்; இந்திய சுதந்திரத்தைப் பாதுகாக்கும் சைன்யந்தான்" என்ற உறுதி ஏற்படுவதற்கு ஒரு சிறு தடை குறுக்கிட்டுக் கொண்டிருந்தது. அந்தத் தடையும் இப்போது நீங்கி விட்டதென்பது இந்திய மக்களுக்கு இணையற்ற மகிழ்ச்சி தரும் செய்தியாகும். குடகு நாட்டில் பிறந்த வீரர் லெப்டினண்ட் ஜெனரல் கரியப்பா வருகிற 1949-ம் ஆண்டு ஜனவரி 15-யன்று இந்திய சைன்யத்தின் தலைவர் ஆகிறார். அந்தச் சுப தினத்தில் இந்தியா தேசம் 100க்கு 100 பங்கு பரிபூரண சுதந்திரத்தை அடைகிறது என்று கூறுவது மிகையாகாது. அன்று முதல் "இந்திய சைன்யம் நமது சொந்த சைன்யம்" என்று எந்தவித ஐயப்பாட்டுக்கும் இடமின்றி இந்திய மக்கள் பெருமிதத்துடன் கூறிக் கொள்ளலாம்.



கடும் குளிர் காலத்தில் பனிக்கட்டி உறைந்து வழிகளை அடியோடு அடைத்து விடும் காஷ்மீர் பிரதேசத்தில், நமது இந்திய வீரத் துருப்புகள் உறைபனிப் பாறைகளைப் பிளந்து வழி செய்துகொண்டு முன்னேறும் காட்சி.

• • •

இன்றைய உலக நிலைமையைக் கவனிக்கும்போது சர்வ தேசிய விவகாரங்களில் நாளை என்ன நடக்கும் என்று சொல்ல முடியாமலிருக்கிறது. யாரும் யாரும் விரோதிகள் ஆவார்கள், யாருக்கும் யாருக்கும் யுத்தம் நடக்கும், எந்தக் கட்சியில் எந்த தேசம் சேரும் என்றெல்லாம் திட்டமாகக் கூறுவது இயலாத காரியம். இந்தியாவை நாற்புறமும் அபாயம் சூழ்ந்திருக்கிறது என்பது மட்டும் நிச்சயமான விஷயம். எந்தப் பக்கமிருந்து அபாயம் இந்தியாவைத் தாக்கும் என்று தெரியாது. எனவே, சுதந்திர இந்தியா எந்த நிமிஷத்திலும் எந்தப் பக்கத்திலிருந்து அபாயம் வந்தாலும் அதைத் தடுத்து விரட்டுவதற்கு ஆயத்தமாயிருக்கவேண்டும். இதற்கு இந்தியாவின் சைன்யத்தை இணையற்ற வலிமையும் திறமையும் நவீன யுத்த சாதனங்களும் உடையதாக வைத்திருக்க வேண்டும்.

இதற்கு அடிப்படையாக இந்தியப் பொது மக்கள் இந்திய சைன்யத்தின் விஷயத்தில் தங்களுடைய பழைய மனோபாவத்தை அடியோடு மாற்றிக் கொள்ள வேண்டும். சுதந்திரப் போர் நடந்து கொண்டிருந்த காலத்தில், இந்திய சைன்யத்தை அன்னிய ஆட்சியின் கருவியாக எண்ணி நமக்குப் பழக்கமாகி யிருந்தது. சுதந்திரம் அடைந்து விட்ட இந்தியாவில் இந்திய சைன்யத்தைப் பற்றி நம்முடைய மனப் பான்மையில் புரட்சி ஏற்பட வேண்டும். தாய் நாட்டின் சுதந்திரத்தைப் பாதுகாப்பதற்காகத் தங்கள் இன்னுயிரையும் கொடுக்கத் தயாராயிருக்கும் சுதந்திர வீரர்களாகவே நம்முடைய சேனை வீரர்களைக் கருத வேண்டும்.

சுதந்திர இந்திய சைன்யத்தின் மாபெருந் தலைவராகப் போகும் வீரர் லெப்டினண்ட் ஜெனரல் கரியப்பாவின் உருவப்படத்தைப் பெருமிதத்துடன் இந்த இதழின் அட்டையில் வெளியிட்டிருக்கிறோம். இந்திய சைன்யத்தைச் சேர்ந்த தமிழ் வீரர் ஒருவர் எழுதியுள்ள கட்டுரையையும் இந்த இதழில் வெளியிட்டிருக்கிறோம். நமது சுதந்திர சைன்யத்தைப் பற்றிப் பொது மக்கள் நன்கு அறிந்து கொள்வதற்கு அக்கட்டுரை உதவியாயிருக்குமென்று நம்புகிறோம்.

○ ○ ○ நமது மாபெரும் இந்திய சைன்யத்தைச் சேர்ந்த ஒரு தமிழன்பர் மேலதிகாரிகளின் உத்தரவு பெற்றுப் பின்வரும் கட்டுரையை எழுதியுள்ளார். இக் கட்டுரை அச்சுக்குப் போகும் சமயத்தில், லெப்டினன்ட் ஜெனரல் கரியப்பா அவர்கள் வரும் ஜனவரி 15உ இந்திய சைன்யத்தின் பிரதம சேனாதிபதியாகப் பதவி ஏற்பார் என்னும் நற்செய்தி வெளியாகி யிருக்கிறது. ○ ○ ○

# இந்தியாவின் சைன்யம்

**லெப்டினன்ட் கர்னல் ஏ. என். சுந்தரமூர்த்தி**

**டில்லி—29-11-1948**

தற்போதுள்ள இந்திய சைன்யம் ஆதியில் அமைக்கப்பட்டபோது மிகச் சிறிய அளவில் இருந்தது. பதினேழாவது நூற்றாண்டில் சூரத், மசூலிப்பட்டணம், சென்னை முதலிய இடங்களில் கிழக்கு இந்தியாக் கம்பெனியார் தங்கள் வியாபார ஸ்தாபனங்களைக் காப்பாற்றிக் கொள்வதற்காகக் காவற்காரர்களை ஏற்படுத்தினார்கள். அந்தக் காவற்காரர்களே தற்காலத்திய இந்திய சைன்யத்தின் முதல் தொண்டர்கள் எனக் கூறலாம்.

இந்தக் காவற்காரர்களின் தொகை எந்த விதத்திலும் பெருகக்கூடாதென்றும், சைன்யங்களைப் போல ஆயுதங்கள் தரிக்கக்கூடாது என்றும் கட்டளை விதிக்கப்பட்டிருந்தது. ஆயினும் கிழக்கு இந்தியக் கம்பெனியாரின் முயற்சியால் சைன்யம் சிறிது சிறிதாகப் பெருகி 1857-ம் ஆண்டில் ஆபீசர்கள், சிப்பாய்கள், மிலிடெரி போலீஸ் உள்பட சேனையின் தொகை 3,11,038 ஆகப் பெருகியது. 1857-ம் வருஷத்தில் நிகழ்ந்த புரட்சிக் கலகத்திற்குப் பிறகு தற்காலம் வரை இந்திய சைன்யத்தில் அவ்வப்போது பல மாறுதல்களும் சீர்திருத்தங்களும் செய்யப்பட்டிருக்கின்றன.

இந்திய சைன்யம் தற்போது மேற்குத் திசைத் தளம் (வெஸ்டர்ன் கமாண்ட்), கிழக்குத் திசைத் தளம் (ஈஸ்டர்ன் கமாண்ட்), தெற்குத் திசைத் தளம் (ஸதர்ன் கமாண்ட) என மூன்று பெரிய பகுதிகளாக உள்ளது. தென் திசைத் தளத்தின் தலைமை ஸ்தலம் பூனாவிலும், கிழக்குத் திசைத் தளத்தின் தலைமை ஸ்தலம் ராஞ்சியிலும், மேற்குத் திசைத் தளத்தின் தலைமை ஸ்தலம் டில்லியிலும் நிலைபெற்றிருக்கின்றன.

ஒவ்வொரு தளத்திலும் அவசியத்திற்கு ஏற்றவாறு சைன்யத்தின் தொகை அதிகமாகவோ குறைவாகவோ இருக்கும். தற்போது மேற்குத் திசைத் தளத்திலேயே மற்ற தளங்களைவிட அதிகப் படைகள் இருக்கின்றன. ஏனெனில் இந்தத் தளத்தில் இருந்தே ஜம்மு, காஷ்மீர் யுத்தம் நடைபெற்று வருகிறது.

ஒவ்வொரு தளத்திலும் பல டிவிஷன்கள், ஏரியாக்கள், ஸப் ஏரியாக்கள், பிரிகேடுகள், பட்டாலியன்கள் (பட்டா



லெப்டினன்ட் ஜெனரல் கரியப்பா



லெப்டினண்ட ஜெனரல் ராஜேந்திர ஸிங்ஜி



லெப்டினன்ட் ஜெனரல் நத்து ஸி

னங்கள்) எனப் பல பிரிவுகள் உண்டு. எல்லாவற்றிலும் சிறிய பிரிவு 'செக்ஷன்' எனப்படும். எட்டு அல்லது பத்து வீரர்கள் கொண்டது ஒரு செக்ஷன். மூன்று செக்ஷன்கள் கொண்டது ஒரு 'ப்ளாடூன்'. இதற்கு அதிகாரி ஒரு ஜே. ஸி. ஓ. (அதாவது ஜூனியர் கமிஷண்ட் ஆபீஸர்) மூன்று ப்ளாடூன்கள் கொண்டது ஒரு கம்பெனி. ஒவ்வொரு கம்பெனியிலும் ஒரு ஆபீஸரும், நான்கு ஜே. ஸி. ஓக்களும் உண்டு. நான்கு ரைபிள் கம்பெனிகள், ஒரு தலைமைக் கம்பெனி, ஒரு ஆபீஸ் ஆக ஆறு கொண்டது ஒரு பட்டாலியன். மூன்று பட்டாலியன்கள் சேர்ந்தது ஒரு பிரிகேட். மூன்று பிரிகேடுகள் சேர்ந்தது ஒரு டிவிஷன். மூன்று டிவிஷன்கள் கொண்ட பெரும் சைன்யப் பகுதி 'கோர்' எனப்படும்.

மேலே குறிப்பிட்டுள்ள தொகை எப்பொழுதும் எங்கும் ஒரேவிதமாக இருக்க வேண்டும் என்பதில்லை. சமயத்திற்கேற்றவாறு சிற்சில பட்டாலியன்கள் அல்லது பிரிகேடுகளின் தொகை சிறிது அதிகமாகவோ அல்லது குறைவாகவோ இருக்கும். ஒவ்வொரு பிரிகேடிலும் கவச மோட்டார், டாங்கி, பீரங்கி முதலியவை அவ்வப்போது உதவி செய்வதற்குத் தயாராக அணிவகுத்து நிற்கும்.

மேற்கூறிய யுத்த அணிவகைகளோடு அந்தந்த அணிக்கு உதவியாகச் செய்தி அறிவிப்போர், உணவு முதலிய ஏற்பாடுகள் செய்வோர், தேச அமைப்புப் படம் தயாரிப்போர், ஆபீஸ் வேலை செய்வோர், கல்விகற்றுக்கொடுப்போர், இயந்திர ரிப்பேர் செய்வோர், வைத்தியம் செய்வோர் எனப் பல பகுதிகள் உண்டு.

நம் தேசத்தில் தற்காலம் இவை போன்ற டிவிஷன்கள், யுத்த வீரர்கள், இயந்திரப் படைகள் முதலியவை எவ்வளவு என்பது அரசாங்க இரகசியம்.

ஆயினும் சர்தார் வல்லபாய் அவர்கள் அடிக்கடி கூறி வருவதுபோல நம் இந்திய சைன்யம், சுதந்திர இந்திய தேசத்தை யார் தாக்கினாலும் அவர்களை முறியடித்துத் துரத்தப் போதுமானதாகும். இது ஹைதராபாத்திலும், காஷ்மீரத்திலும் நாம் அடைந்துள்ள வெற்றிகளிலிருந்து வெளியாகிறது. மேலும் இந்திய யுத்த வீரர்களை ஏவி விட்டால் அவர்கள் காஷ்மீரத்தில் சிறிது இங்கும் அங்கும் தலைகாட்டி வரும் விரோதியைப் பூண்டோடு அழித்து வெகு சீக்கிரம் வெற்றிக்கொடி நாட்ட வல்லமை வாய்ந்தவர்கள் என்பதைப் பற்றிச் சிறிதும் சந்தேகம் இல்லை.

ஆனால் நீதி, நியாயம், உலகக் கட்டுப்பாடு முதலியவைகளைக் கருதி நேர்மையான வழியையே கடைப்பிடித்து நடக்க வேண்டும் என்று உறுதிகொண்டுள்ள நம் இந்திய சர்க்கார், அவசரப்பட்டுப் பரபரப்பாக எதுவும் செய்ய விரும்பவில்லை. எனவே காஷ்மீரத்தில் நம் வீரர்கள் எதிரியைத் தற்போது தடுத்த வண்ணம் நிற்கின்றனர். எதிரிகளைத் தாக்க உத்தரவு கிடைத்திருந்தால், அவர்களை நமது வீரர்கள் எல்லைப்புறத்திற்கு அப்பால் எப்பொழுதோ விரட்டியோட்டி இருப்பார்கள் என்பதை, மிகக் கடினமான இடங்களாகிய ட்ராஸ், கார்கில், மெந்தர் முதலிய காஷ்மீர் பிரதேசங்களில் நடந்த யுத்தத்தில் நாம் அடைந்த அமோகமான வெற்றிகளிலிருந்து விளங்கிக்கலாம்.

• • •

இந்திய யுத்த வீரர்களின் சம்பளம் புதிய ஏற்பாட்டின்படி ரூபாய் முப்பதிலிருந்து தொண்ணூறு வரை உயரும். ஒரு வீரனின் உத்தியோகம் உயர்ந்தால் அதாவது 'லான்ஸ் நாயக்' என்னும் பதவிக்கு வந்தால் மாதம் ஐந்து ரூபாய்



ப்டினன்ட் ஜெனரல் ஸ்ரீநாகேஷ்



மேஜர் ஜெனரல் திம்மையா



மேஜர் ஜெனரல் சௌத்ரி


மேஜர் ஜெனரல் கல்வந்த் சிங்


மேஜர் ஜெனரல் ஆப்ரா சிங்


மேஜர் ஜெனரல் தாப்பர்

உயரும். இவ்விதமே நாயக்கிற்கு 10—15 ரூபாய், ஹவில்தாருக்கு 25 ரூபாய், குவார்ட்டர் மாஸ்டருக்கு 27 ரூபாய், ஹவில்தார் மேஜருக்கு 30 ரூபாய்,—எனப் படிப் படியாக உயரும். இந்த உத்தியோகஸ்தர்கள் பொதுவாக என். ஸி. ஓ. (நான் கமிஷன்ட் ஆபீஸர்) என்று அழைக்கப்படுகிறார்கள். இவர்களுக்கு மேலுள்ள வகுப்பினருக்கு வாரண்ட் ஆபீஸர்கள் என்று பெயர். இவர்களுக்குச் சம்பளம் ரூ 72/8-லிருந்து 122/8 வரைக்கும் அதற்குமேல் ரூ. 130-லிருந்து 180 வரைக்கும் நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது.

வாரண்ட் ஆபீஸர்களுக்கு மேற்பட்ட வகுப்பினர் ஜூனியர் கமிஷன்ட் ஆபீஸர் (ஜே. ஸி. ஓ.) எனப்படுவர். இவர்கள் ஜமேதார், சுபேதார், சுபேதார்மேஜர் என்று அழைக்கப்படுவர். இவர்களுக்குச் சம்பளம் ரூ. 140, 180, 265 என உத்தியோக காலத்துக்கு ஏற்றவாறு உயரும்.

மேற்கூறிய மூன்று வகையோருக்கும் குறிப்பிட்டுள்ள சம்பளத்தைத் தவிர உடை, உணவு, வீடு, வைத்திய வசதி, பிரயாணச் செலவு முதலியன சர்க்காருடையதாகும். தவிர, ஏதாவது ஓர் அணியில் ஒருவர் தேறியிருப்பின் அதற்கென அவருக்கு விசேஷ அலவன்ஸ் உண்டு.

ஜே. ஸி. ஓக்களுக்கு மேலுள்ளவர் ஐ. ஸி. ஓ. (இந்தியன் கமிஷன்ட் ஆபீஸர்) எனப்படுவர். இவர்களையே இந்திய சுதந்திரம் பெறுவதற்கு முன்னால் கே.ஸி. ஓ. (கிங்ஸ் கமிஷன்ட் ஆபீஸர்) என்று பிரிட்டிஷ் சர்க்கார் கூறிவந்தனர். இவர்களுடைய சம்பளம் உத்தியோக அனுபவத்துக்கு ஏற்றவாறு பின்வரும் படித்தரங்களைக் கொண்டதாயிருக்கும்:

| | | |
|---|---|---|
| செகண்ட் லெப்டினன்ட் | ரூ. | 300 |
| லெப்டினன்ட் | ,, | 400—450 |
| காப்டன் | ,, | 450—700 |
| மேஜர் | ரூ. | 700—1050 |
| லெப்டினன்ட் கர்னல் | ,, | 1100—1400 |
| கர்னல் | ,, | 1450—1550 |
| பிரிகேடியர் | ,, | 1000—1800 |
| மேஜர் ஜெனரல் | ,, | 2250 |
| லெப்டினன்ட் ஜெனரல் | ,, | 2750 |
| ஜெனரல் | ,, | 3000 |

இவர்களுக்குச் சம்பளத்தைத் தவிர மற்ற வசதிகள் தரப்படுவதில்லை. உணவு உடை வீட்டுச் செலவு ஆகியவற்றை இவர்கள் தங்களுடைய சம்பளத்திலிருந்தே ஈடு செய்து கொள்ளவேண்டும். இராணுவ ஆஸ்பத்திரியில் இவர்கள் பணம் கொடுத்தே சிகிச்சை பெற முடியும். பிரயாணச் செலவுக்கும் தாங்களே செலவு செய்துகொள்ள வேண்டும். மேலும் தங்களுடைய அந்தஸ்திற்குத் தக்கவாறு நடை, உடை விஷயங்களில் நிபந்தனைகள் உண்டு. பிரயாண காலங்களில் உயர்தர வகுப்பிலேயே (முதல் வகுப்பு) செல்லவேண்டும். இவ்வாறான நிபந்தனைகள் இருப்பதினால் இவ் வகுப்பு உத்தியோகஸ்தர்களில் சிலர் தங்களுக்குச் சம்பளம் போதவில்லை என்று கூறுவது உண்டு. ஆயினும், இந்த வகுப்பில் பெரும்பாலோர் சைன்யத்தின் சேவை செய்வதை உத்தியோக பதவியென்று கருதாமல் தேசத்தொண்டெனக் கருதி நடந்து வருகின்றனர்.

இந்திய சைன்யத்தில், மேல் வகுப்பு உத்தியோகஸ்தராக முதலாவது உலக மகா யுத்தத்திற்கு முன் இந்தியர் எவரும் இருந்ததில்லை. முதலாவது மகா யுத்தத்திற்குப் பிறகு நான்கு அல்லது ஐந்து இந்தியர்கள் கே. ஸி. ஓ. வகுப்புக்குப் பிரிட்டிஷாரால் தேர்ந்தெடுக்கப் பட்டனர். இரண்டாவது உலகமகா யுத்தத்தில் இன்னும் சிலருக்கு மேற்படி உத்தியோகங்கள் கிடைக்கலாயின. ஆயினும்

மேஜர் ஜெனரல் ருத்ரா

மேஜர் ஜெனரல் தோரட்

ஏர் வைஸ் மார்ஷல் முக்கர்ஜீ

1946, 1947-ம் வருஷம் வரை உயர்ந்த உத்தியோகங்களெல்லாம் ஆங்கிலேயர்களாலேயே வகிக்கப்பட்டு வந்தன. இப்பொழுதோ இரண்டு பிரிகேடியர்களும் பிரதம சேனாதிபதி (கமாண்டர்-இன் சீப்) ஒருவரும் தவிர மற்ற உத்தியோகஸ்தர்கள் எல்லோரும் இந்தியர்களே. மேற்கூறிய இரண்டு பிரிகேடியர் பதவிகளும் கூட இந்த வருஷ முடிவிற்குள் இந்தியர்களுக்கே அளிக்கப்பட்டுவிடும்.

இந்திய சைன்யத்தில் இப்பொழுது இந்தியரல்லாதார் 260 பேர்களே இருக்கின்றனர். இவர்கள் ராணுவ ஆலோசனைக்காகவும் புதிய யுத்த ஆயுதங்களின் பயிற்சிக்காகவும் இருக்கிறார்கள். இந்தியர்கள் இவ்வேலைகளைச் செய்யச் செவ்வனே கற்றுக்கொண்டதும், இந்தியரல்லாதார் தாங்களாகவே உத்தியோகங்களிலிருந்து விலகிவிடுவார்கள்.

* * *

இந்திய சைன்யத்தின் பெரும் பகுதி மூன்று திக்குகளிலும் உள்ளன என்று மேலே கூறினோம். அவற்றின் தளபதிகள் இந்தியரே. லெப்டினண்ட் ஜெனரல் கே. எம். கரியப்பா மேற்குத் திசைத் தளத்தின் மேல் அதிகாரி. லெப்டினண்ட் ஜெனரல் நத்து சிங் கிழக்குத் திசைத் தளபதி. லெப்டினண்ட் ஜெனரல் ராஜேந்திர சிங்ஜி தென்திசைத் தளபதி.

இவர்களில் மேற்குத் திசைத் தளபதியாகிய லெப்டினண்ட் ஜெனரல் கரியப்பா அவர்களே சைன்யத்தில் அதிக காலம் சேவை செய்தவர். தற்போதைய கமாண்டர் இன் சீப்பிற்குப் பிறகு அந்தப் பதவியை அடையத் தகுதியுடையவர். இவருக்கு வயது 48. இருபத்தேழு வருஷங்களுக்கு முன் சைன்யத்தில் சேர்ந்தவர். ராணுவப் பரீட்சைகளில் முதலாவதாகத் தேறியவர். 1945-ம் வருஷத்தில் ஒரு பட்டாளத்தில் அதிகாரம் செலுத்திய முதல் இந்தியர் இவரே. பிறகு பலவித ஆலோசனை, ஆராய்ச்சி அலுவல்களுக்காக இங்கிலாந்து, அமெரிக்கா முதலிய இடங்களுக்கு இவரையே தேர்ந்தெடுத்து இந்திய சர்க்கார் அனுப்பி வைத்தனர். இப்பொழுது இவர் மேற்குத் திசைத் தளத்தில் பல சீர்திருத்தங்களைச் செய்து காஷ்மீர் யுத்தத்தைக் கீர்த்தியுடன் நடத்தி வருகிறார்.

இவருக்கு அடுத்த ஸ்தானம் வகிப்பவர் லெப்டினண்ட் ஜெனரல் ராஜேந்திர சிங்ஜி. இவர் கடந்த யுத்தத்தில் மத்தியக் கிழக்கு காடுகளில் தம்மைச் சுற்றிக்கொண்ட எதிரியின் ஒரு புறத்தை உடைத்து வெளியேறியதற்காக டி.எஸ்.ஓ. பதக்கம் பெற்றவர். ஹைதராபாத்தைச் சுலபமாய் அடைய வேண்டிய சாதனங்களைச் சரிவர யோசித்துப் படை அணிகளைத் தக்கவாறு வகுத்து ஐந்தே நாட்களில் வெற்றி பெற்ற இவரது கீர்த்தியைப் பற்றிச் சொல்லவேண்டுமா?

சர்வீஸில் இவருக்கு அடுத்தவர் கிழக்குத் திசைத் தளபதி லெப்டினண்ட் ஜெனரல் நத்து சிங்ஜி. இவரும் முதன் முதலில் சைன்ய உத்தியோகத்தில் உயர்தர வேலைக்கெனத் தேர்ந்தெடுக்கப்பட்டவர். பல பட்டாளப் பயிற்சிகளில் பெயர் வாங்கியுள்ளவர்.

ஒவ்வொரு கமாண்டிலும் அவசியத்திற்கேற்றபடி டிவிஷன்களும், ஏரியாக்களும், சப் ஏரியாக்களும் உண்டு. தென் திசைக் கமாண்டில் பம்பாய், மதராஸ் என இரண்டு ஏரியாக்கள் சாதாரணமாய் உள்ளன. இப்பொழுது ஹைதராபாத் 'போலீஸ் வேலை'க்கெனப் பல டிவிஷன்கள் மேற்படி கமாண்டின் கீழ்


ஏர் கமோடோர் என்ஜினியர்


மேஜர் ஜெனரல் டி. எஸ். பிரார்


மேஜர் ஜெனரல் டில்லன்

கொண்டு வரப்பட்டன. அந்த டிவிஷன்களில் ஒன்றாகிய ஆர்மர்ட் டிவிஷனின் அதிகாரிதான் மேஜர் ஜெனரல் சௌத்ரி ஆவார். இவர் பர்மா யுத்தத்தில் பெயர் பெற்றவர். இந்திய சைன்யத் தலைமைக் காரியாலயத்தில் 'சீப் ஆப் ஜெனரல் ஸ்டாப்' உத்தியோகத்தில் சில நாட்கள் இருந்தார். இப்பொழுது ஹைதராபாத்தில் மிலிடெரி கவர்னர் பதவியிலிருந்து கொண்டு மிகத் திறமையாக அலுவல்களை நடத்திக்கொண்டு வருகிறார்.

டிவிஷன்களுக்கும் ஏரியாக்களுக்கும் அதிகாரிகளாயிருப்பவர் மேஜர் ஜெனரல் பதவியாளராவர். இப்பொழுது மதராஸ் ஏரியா கமாண்டின் அதிகாரியாக இருப்பவர் மேஜர் ஜெனரல் ருத்ரா. இவர் முதலாவது மகா யுத்தத்தின்போது சைன்யத்தில் சேர்ந்து படிப்படியாக முன்னணிக்கு வந்தவர். யுத்தப் பயிற்சியில் மிகத் தேர்ந்தவர்.

மேஜர் ஜெனரல் திம்மய்யா காஷ்மீரத்திலுள்ள ஒரு டிவிஷனின் தளபதி. இவர் யுத்தப் பயிற்சியில் இணையிலா நிபுணர் எனப் பலர் கருதுகின்றனர். முதன் முதல் ஒரு பிரிகேடைத் தன் கீழ் வகித்துப் போர் செய்த இந்தியர். காஷ்மீரத்தில் கீர்த்தி பெற்ற பல போர்களின் வெற்றி இவருடையதேயாகும். எதிரியின் முன்னால் இவருடைய தலைமையில் நிற்கும் சைன்ய அணியின் ஒரு பாகத்திற்குத் "திம்மய்யா லைன்" என்று படை வீரர்கள் பெயரிட்டுள்ளனர்.

* * *

நாம் சுதந்திரம் பெறுவதற்கு முன்னால் பிரிட்டிஷ் ஆதிபத்யத்தின் கீழ் சைன்யத்தில் வீரச் செயல்கள் புரிந்தவர்களுக்கு ஆர்டர் ஆப் பிரிட்டிஷ் இந்தியா, டி. எஸ். ஓ., மிலிடெரி க்ராஸ், விக்டோரியா க்ராஸ் எனப் பதக்கங்கள் கிடைத்ததுண்டு. விக்டோரியா க்ராஸ் பதக்கந்தான் எல்லாவற்றுக்கும் உயர்ந்த வீரப் பதக்கமாகும்.

தற்போது நம் சுதந்திர இந்திய சர்க்காரால் பரம வீர சக்கரம், மஹா வீர சக்கரம், வீர சக்கரம் என மூன்று பதக்கங்கள் இந்திய சைன்யத்திற்கென வகுக்கப்பட்டுள்ளன. பரம வீர சக்கரம் விக்டோரியா க்ராஸ் பதக்கத்திற்கு ஈடாகவும், மஹா வீர சக்கரம் டி. எஸ். ஓ. விற்கு ஈடாகவும், வீர சக்கரம் மிலிடெரி க்ராஸுக்கு ஈடாகவும் நிர்ணயிக்கப்பட்டிருக்கின்றன.

இந்திய சைன்யத்தின் ஒவ்வொரு அணி வகுப்பையும் சேர்ந்த வீரர்களின் வேலைப் பயிற்சியும், வீரமும், தீரமும், குதூகலமும், ஏக குடும்பம் போன்ற ஒற்றுமையும், உன்னத எண்ணமும், உதார குணமும், தேசாபிமானமும் ஒவ்வொருவரும் அறியத் தகுந்தவையாகும். இவைகளைப் பற்றி மேல்நாட்டாரும் மற்றோரும் புகழுரை பல கூறியுள்ளார்கள்.

சுதந்திர இந்தியாவில் தேசத்தின் பிரஜைகள் வேறு, தேசத்தைக் காக்கும் சைன்யம் வேறு என்ற எண்ணம் மாறி, இராணுவ சம்பந்தமான செய்திகள் ஒவ்வொன்றையும் ஜனங்கள் அறியவேண்டும் என்று சைன்ய அதிகாரிகள் கருதுகின்றனர். இந்திய சைன்யத்தைச் சாதாரண ஜனங்களிடமிருந்து விலக்கி வைத்த பிரிட்டிஷ் ஆதிபத்யம் போய்விட்டது. இனி, தேசத்தையும், தேசத்தின் சுதந்திரத்தையும் காப்பதற்கென இருக்கும் நம் சொந்த இந்திய சைன்யத்தைப் பற்றிய எல்லா விவரங்களையும் ஜனங்கள் தெரிந்து கொள்வது அவசிய மல்லவா?

சலவை வேலை சுலபமாகிறது. காவேரி பார் ஸோப் ஏராளமான நுரையை அளித்து, உங்கள் துணி களில் இருக்கும் நுண்ணிய அழுக்கையும் எளிதில் அகற்றி சுத்தமாக்குகிறது. காவேரி ஸோப்பின் மிருதுவான அழுக்கெடுப்பு தன்மை ஆடைகளை அழிக்காமல் வெளுக்க வெளுக்க வெகுநாள் உழைப்பை அவைகளுக்கு அளிக்கிறது.

# காவேரி

# | பா | ர் | ஸோ | ப் |

தயாரிப்பவர்:

**மேட்டூர் கெமிகல் & இன்டஸ்ட்ரியல் கார்ப்பொரேஷன் லிட்.,**
**மேட்டூர் அணை — சேலம்**



மானேஜிங் ஏஜெண்ட்ஸ்:

**சேஷசாயி பிரதர்ஸ் லிமிடெட்,**
**திருச்சிராப்பள்ளி**



பூரண விற்பனை ஏஜெண்டுகள்:

**அலைட் இண்டஸ்ட்ரியல் டிஸ்ட்ரிப்யூடர்ஸ் லிமிடெட்**
**120, அரண்மனைக்காரத் தெரு**
**மதராஸ்**

# அலை ஓசை

## கல்கி

### ஐந்தாம் அத்தியாயம்

### "ஹிட்லருக்கு ஜே!"

சென்னைமாநகரின் ஓரோரத்தினமாக விளங்கி வந்த பத்மாபுரத்தில் "தேவி ஸதனம்" என்னும் பங்களாவில் ராவ்பகதூர் பத்மலோசன சாஸ்திரிகள் தூர்வாச முனிவராக உருக்கொண்டிருந்தார். தம்முடைய இருதய கமலத்திலிருந்து பொங்கி வந்த குரோத மோக மாத்சரியங்களைப் பேனா முனை வழியாகக் காகிதத்தில் தீட்டிக் கொண்டிருந்தார். "தார்மிக கேஸரி" என்னும் ஆங்கிலப் பத்திரிகைக்கு அவர் எழுதிக் கொண்டிருந்த கட்டுரை, எழுதிய காகிதம் தீப் பட்டு எரியுமாறு அவ்வளவு உத்வேகமாகப் போய்க் கொண்டிருந்தது. சில காலமாக மேற்படி பத்திரிகையின் பத்திகளில் ராவ் பகதூர் பத்மலோசன சாஸ்திரியாருக்கும் பேராசிரியர் பரிவ்ராஜக சர்மாவுக்கும் மாபெரும் விவாத யுத்தம் நடந்து கொண்டிருந்தது. அந்த யுத்தத்துக்கு மூல காரணம் சாஸ்திரியார் பத்மாபுரம் சர்வக்ஞ சங்கத்தில் நிகழ்த்திய ஒரு பிரசங்கந்தான்.

ஹிந்து சமுதாயத்தில் அநாதிகாலமாக ஏற்பட்டுள்ள வருணாசிரமத்தின் சிறப்பைச் சாஸ்திரியார் மேற்படி பிரசங்கத்தில் சாங்கோபாங்கமாக விளக்கினார். வர்ணாசிரம தர்மத்தை மேற்கொள்ளாததினால் மேனாடுகள் ப்படிப் பயங்கரமான யுத்தத்தில் கப்பட்டுக் கொண்டு தவிக்கின்றன ன்று எடுத்துக் காட்டினார். நாலு ணங்களைப் பற்றிச் சொல்லிவிட்டு நாலு ஆசிரமங்களைப் பற்றிக் கூறும் போது, சந்நியாச ஆசிரமத்தின் மகிமையைப் பற்றி மிக விஸ்தாரமாக எடுத்துச் சொன்னார். காலாகாலத்தில் சந்நியாச ஆசிரமத்தை மேற்கொள்ள முடியாதவர்கள் அந்திய காலம் நெருங்கி விட்டதென்று தெரிந்த பிறகாவது 'ஆபத் சந்நியாசம்' வாங்கிக் கொள்வதின் அவசியத்தை இலேசாகக் குறிப்பிட்டார். சாஸ்திரியாரின் மேற்படி பிரசங்கத்தின் சாராம்சம் சற்று விரிவாகவே தினப் பத்திரிகைகளில் வெளியாகி யிருந்தது.

மேற்கண்ட கருத்துக்கள் சாதாரணமாகப் பேராசிரியர் பரிவ்ராஜக சர்மா ஒப்புக் கொள்ளக் கூடியவைதான். ஆயினும் சாஸ்திரியார் பிரசங்கம் செய்து அது பத்திரிகையிலும் வந்து விட்ட காரணத்தினால் ஏதாவது ஒரு விதத்தில் அதைத் தாக்குவது சர்மாவின் இன்றியமையாத கடமையாயிற்று. எனவே, "தார்மிக கேஸரி"க்கு ஒரு நீண்ட கடிதம் எழுதினார். அதன் சாராம்சமாவது:—"இந்தக் காலத்தில் சிலர் சந்நியாச ஆசிரமத்தைப் பற்றிப் பிரமாதமாகப் புகழ்ந்து பேச ஆரம்பித்திருக்கிறார்கள். உண்மையில் பழைய வேதகாலத்து ஹிந்துக்கள் சந்நியாசத்துக்கு அவ்வளவு உயர்வைக் கொடுக்கவில்லை. ஸஹதர்மிணி இல்லாதவன் யாகம் செய்வதற்கு உரியவனாகக் கருதப்படவில்லை. அத்திரி, பிருகு, ஆங்கிரஸர், அகஸ்தியர், வசிஷ்டர், வாமதேவர், பராசரர் முதலிய மகாரிஷிகளுக்குப் பத்தினிகள் இருந்தார்கள். கௌதம புத்தருடைய காலத்துக்குப் பிறகுதான் இந்தியாவில் சந்நியாசத்துக்குச் சிறப்பு ஏற்பட்டது. 'ஆபத் சந்நியாசம்' வாங்கிக் கொள்ளும் வழக்கம் மிக்க அபத்தமானது. புதல்வர்கள் சரிவரச் சிராத்தம் செய்யமாட்டார்களோ என்று பயந்தவர்கள்தான் கடைசிக் காலத்தில்

அவசர அவசரமாகச் சந்நியாசம் பெறுவார்கள். சில அபூர்வமான புத்திரசிகாமணிகள் தகப்பனுக்குச் சிராத்தம் செய்யும் சங்கடம் இல்லாமற் போவதற்காகத் தகப்பனாரைக் கட்டாயப் படுத்தி மொட்டையடித்துக் காஷாயம் கட்டிவிடுவதும் உண்டு. ராவ்பகதூர் பத்மலோசன சாஸ்திரியாருக்கு இத்தகைய விபத்து எதுவும் நேராது என்று நம்புகிறேன். சாஸ்திரியார் இம்மாதிரியெல்லாம் உளறிக் கொட்டாமல் தமது திருவாயை மூடிக் கொண்டிருந்தாரானால் ஹிந்து தர்மத்துக்குப் பேருதவி செய்தவராவார்."

இத்தகைய அவதூறு நிறைந்த கடிதத்தைப் படித்துவிட்டு ராவ்பகதூர் பத்மலோசன சாஸ்திரியார் அளவில்லாத கோபங் கொண்டது இயல்பேயல்லவா? அவர் எழுதிய மறுப்புக் கடிதத்தில் பேராசிரியர் சர்மாவை வெளு வெளு என்று வெளுத்திருந்தார். "ஹிந்து சமயத்தில் சந்நியாச ஆசிரமத்துக்கு உயர்வு கொடுக்கவில்லையென்று எந்த மூடசிகாமணி, — எந்த நிரட்சர குட்சி சொல்லுவான்? இந்தியாவில் ஹிந்து தர்மத்தை நிலைநாட்டிய மகாபுருஷரான ஆதி சங்கராச்சாரியார் சந்நியாசி அல்லவா? நம்முடைய காலத்தில் ஹிந்து தர்மத்தின் உயர்வை உலகமெல்லாம் உணரும்படி செய்தவர் சுவாமி விவேகானந்தர் அல்லவா? இன்று திருவண்ணாமலையில் எழுந்தருளியிருக்கும் ரமண மகாரிஷியின் பெருமையை உணராத ஜடமாக யார் இருக்க முடியும்? இராமாயண காலத்தில் இந்தியாவிலே சந்நியாச ஆசிரமத்துக்கு எவ்வளவு பெருமை இருந்தது என்பதை வால்மீகி பகவான் சந்தேகத்துக்கு இடமின்றிச் சொல்லியிருக்கிறார். சந்நியாசி வேடத்தில் வந்த இராவணனைப் பார்த்ததும் சீதாதேவி எவ்வளவு பயபக்தி மரியாதையுடன் அவனை உபசரிக்கிறாள்? சந்நியாசத்துக்கு அவ்வளவு மரியாதை அந்தக் காலத்தில் இருந்தபடியால் அல்லவா இராவணன் சந்நியாச கோலம் பூண்டு சீதையிடம் வந்தான்? நிற்க, ஆசிரமங்களை எப்படி வரிசைப் படுத்தியிருக்கிறது என்பதிலிருந்தே எது உயர்ந்த ஆசிரமம் என்பதை நன்கு அறியலாம். பிரம்மசரியம், கிரகஸ்தம், வானப்பிரஸ்தம், சந்நியாசம் என்னும் வரிசையில் சந்நியாசம் கடைசியில் இருப்பதனாலேயே அது எல்லா ஆசிரமங்களுக்கும் சிகரமானது என்று விளங்கவில்லையா? சாதாரணமாக எல்லாருக்கும் இது விளங்கக்கூடிய விஷயந்தான். மெத்தப் படித்த மேதாவியான பேராசிரியர் சர்மாவின் அபார மூளைக்கு மட்டும் இது விளங்கவில்லை போலும்!"

இவ்வாறு சாஸ்திரியார் எழுதியதை விவாதத்தில் கடைசி வார்த்தையாக இருக்கும்படி விட்டுவிட்டுப் பேராசிரியர் சர்மா சும்மா இருந்து விடுவாரா? மீண்டும் அவர் எழுதத்தான் செய்தார்:

"ராவ்பகதூர் பத்மலோசன சாஸ்திரிகள் தாம் மெத்தப் படித்தவர் இல்லையென்று ஒப்புக் கொள்கிறார். அப்படியானால் கொஞ்சம் படித்தவர் என்று ஏற்படுகிறது. ஆனால் அந்தக் கொஞ்சமும் எதைப் படித்தாரோ, தெரியவில்லை. இந்தியாவின் சரித்திரத்தைத் தொட்டுப் பார்த்ததேயில்லையென்று திட்டமாய்த் தெரிகிறது. புத்தருக்குப் பிறகு இந்தியாவிலே சந்நியாசத்துக்குப் பெருமை ஏற்பட்டது என்று நான் சொன்னேன். சாஸ்திரியார் ஸ்ரீ சங்கராச்சாரியாரையும், சுவாமி விவேகானந்தரையும், ஸ்ரீ ரமண ரிஷிகளையும் குறிப்பிட்டிருக்கிறார். இந்த மூவரும் புத்தருக்கு முன்னாலிருந்தவர்கள் என்பது சாஸ்திரியாரின் எண்ணம் என்று தெரிகிறது. ஆனால் சாஸ்திரியார் சொல்லி விட்டதற்காகச் சரித்திரம் வந்த வழியே திரும்பிப் போய்விடாது. சாஸ்திரியார் 'இராவண சந்நியாசி'யைக் குறிப்பிட்டது பற்றிச் சந்தோஷப்படுகிறேன். இராமாயண காலத்திலேயே சந்நியாச ஆசிரமம் போலிகளுக்கும் மோசக்காரர்களுக்கும் வேஷமாகி விட்டது என்பதை வால்மீகி பகவான் நன்றாக ஸ்தாபனம் செய்திருக்கிறார்! ஆசிரம வரிசைக் கிரமத்தில் சந்நியாசம் கடைசியில் வருவதால் அதுவே உயர்ந்த ஆசிரமம் என்று சாஸ்திரியார் சாதிக்கிறார். இதேமாதிரி வர்ணங்களிலும் கடைசி வர்ணமே உயர்ந்தது என்று சாஸ்

திரியார் ஒப்புக் கொள்கிறாரா? அப்படி ஒப்புக் கொண்டால் நானும் சந்நியாசத்தின் உயர்வை ஒப்புக் கொண்டு சாஸ்திரியாருக்கு இப்போதே 'ஆபத் சந்நியாசம்' வாங்கிக் கொடுக்க ஏற்பாடு செய்கிறேன்."

சாஸ்திரிகளின் பாடு இப்போது மிகவும் சங்கடமாகத்தான் போய் விட்டது. தம்முடைய வாதங்களில் உள்ள பலக் குறைவைக் கோபத்தினாலும் சாபத்தினாலும் இட்டு நிரப்புமாறு காரசாரமுள்ள பதில் ஒன்றை எழுதப் பிரயத்தனம் செய்து கொண்டிருந்தார். அந்தப் பிரயத்தனம் காரணமாகச் சாஸ்திரியார் ரௌத்ராகாரம் அடைந்திருந்த சமயத்தில் வீதியில் அவருடைய பங்களாவின் வாசலில் "பவதி! பிட்சாந் தேஹி!" என்ற குரல் ஒன்று கேட்டது.

மேல்மாடித் தாழ்வாரத்துக்கு வந்து சாஸ்திரியார் எட்டிப் பார்த்தார். இளம்பிராயத்துத் துறவி ஒருவர் நிற்பதைக் கண்டார். அவருக்கு ஏற்பட்ட வியப்பைச் சொல்லி முடியாது. தம் வாழ்நாளிலேயே இதுவரையில் இல்லாத பரபரப்புடன் மச்சுப் படிகளை மூன்று மூன்றாகக் குதித்துத் தாண்டிக்கொண்டு கீழே இறங்கினார். பின் கட்டிலிருந்த தமது வாழ்க்கைத் துணைவியை அழைத்து "காமாட்சி! ஒரு அதிசயத்தைக் கேள்! வாசலில் யாரோ ஒரு பால சந்நியாசி வந்து நிற்கிறார் முகத்திலே தேஜஸ் ஜொலிக்கிறது. 'பவதி! பிட்சாந் தேஹி!' என்ற வார்த்தையைக் கேட்டதும் எனக்கு உடம்பெல்லாம் சிலிர்த்து விட்டது. வாசற்கதவுச் சாவியைச் சீக்கிரம் கொண்டுவா! ஒரு மகானை எத்தனை நேரம் வாசலில் நிறுத்தி வைக்கிறது? சாக்ஷாத் ஆதிசங்கரரே திரும்ப அவதாரம் எடுத்து வந்தது போலிருக்கிறது. நம் பித்ரு, பிதா மகர்கள் செய்த பாக்கியம், நம் வீட்டைத் தேடி வந்திருக்கிறார். என்ன பேசாமல் நிற்கிறாயே?" என்று இரைந்தார்.

இதற்குள் வாசற்புறம் எட்டிப் பார்த்து யாரோ ஒரு சந்நியாசி நிற்பதைத் தெரிந்து கொண்ட காமாட்சி அம்மாள், "எதற்காக இவ்வளவு படபடப்பாய்ப் பேசுகிறீர்கள்? வாசற் கதவு திறந்துதானிருக்கிறது. அப்படி அதிசயமான மகான் எங்கேயிருந்து வந்து குதித்துவிடப் போகிறார்? இராமகிருஷ்ண மடத்தைச் சேர்ந்த சாமியாராயிருக்கும். ஏதாவது சந்தா வசூலிப்பதற்காக வந்திருக்கிறார் போலிருக்கிறது?" என்றாள்.

இதைக் கேட்டதும் சாஸ்திரியாரின் உற்சாகம் கொஞ்சம் தணிந்தது. காமாட்சி அம்மாள் சொன்னதைப் போலவே இராமகிருஷ்ண மடம் அல்லது கௌடியா மடத்திலிருந்து யாராவது சந்தா கேட்க வந்திருக்கலாம் என்று நினைத்தார். ஆனால் அப்படியிருந்தால் "பவதி! பிக்ஷாந் தேஹி!" என்று கேட்டிருக்க மாட்டாரல்லவா? இந்த எண்ணம் கொஞ்சம் தைரியத்தை மூட்டியது. எப்படியிருந்தாலும் பார்த்து விடலாம் என்று வாசற்பக்கம் விரைந்து சென்றார். காமாட்சி அம்மாளும் குழந்தை வஸந்தியும் பின்னோடு வந்தார்கள்.

இதற்குள் சுவாமியாரும் கதவைத் திறந்து கொண்டு வீட்டுக்குள் பிரவேசித்தார். சந்நியாசியை நெருங்கி நின்று பார்த்ததும் சாஸ்திரியாரும் காமாட்சி அம்மாளும் 'தெரிந்த முகமாய்த் தோன்றுகிறதே! யாராயிருக்கும்?' என்று திகைத்தார்கள்.

"மாமி! என்னை அடையாளந் தெரிகிறதா?" என்று சுவாமியார் கேட்டதும் காமாட்சி அம்மாளுக்குப் பளிச்சென்று உண்மை தெரிந்துவிட்டது.

"நம்ம சூரியா போலிருக்கிறதே! இது என்ன கோலம்?" என்றாள் காமாட்சி அம்மாள்.

"நம்ம சூரியா போலிருக்கிறதா? என்ன உளறுகிறாய்? நம்ம சூரியா என்றால் யார்?" என்றார் சாஸ்திரியார்.

"ராஜம்பேட்டைக் கிட்டாவய்யர் பிள்ளை சூரியா தான். வேறு எந்த சூரியாவைச் சொல்லப் போகிறேன்?"

"நிஜமாகவா? அதனாலேதான் எனக்குக்கூடப் பார்த்த முகமாகத் தோன்றியது" என்றார் சாஸ்திரியார்.

"ஆமாம்; பூர்வாசிரமத்தில் இந்தக் கட்டையின் பெயர் சூரியா தான்; இந்த ஆசிரமத்தில் சுதந்திரானந்தர்" என்று சொன்னார் சந்நியாசி.

"அப்படியா? ரொம்ப சந்தோஷம். பால் நழுவிப் பழத்தில் விழுந்தது போலாயிற்று!" என்று உபசரித்துக்

கொண்டே சாஸ்திரிகள் ஸ்ரீ சுதந்திரானந்தரை அழைத்துச் சென்று ஹாலில் சோபாவில் உட்காரச் செய்தார்.

காமாட்சி அம்மாள்: "இத்தனை சின்ன வயதில் இது என்ன கோலம்? அப்பா அம்மா சம்மதித்தார்களா? காலகாலத்தில் ஆகவேண்டியதெல்லாம் ஆகி வயதான பிறகு சந்நியாசம் வாங்கிக் கொண்டால் பாதகமில்லை!"

சுவாமியார் பதில் சொல்வதற்குள் சாஸ்திரியார் குறுக்கிட்டு, "ரொம்ப லட்சணந்தான்! உன்னைக் கேட்டுக் கொண்டு சந்நியாசி ஆகவேணும் போலிருக்கிறது. உலகத்தைத் துறந்து ஆசிரமம் வாங்கிக் கொண்ட பிறகு, அப்பா யார்? அம்மா யார்? பரிவ்ராஜகர் ஆன பிறகு, உலக பந்தமே கிடையாது. குடும்ப பந்தம் எப்படி வரும்? அவள் கிடக்கிறாள், சுவாமிகளே! தங்களைப்போல் பால வயதில் வைராக்கியமடைந்து ஆயிரம்பேர் சந்நியாசம் வாங்கிக் கொண்டு ஸநாதன தர்மத்தைப் பிரசாரம் செய்வது என்று ஆரம்பித்தால் ஸநாதன தர்மம் உத்தாரணமே ஆகிவிடும். அது இருக்கட்டும். தாங்கள் எங்கே, எப்போது இந்த ஆசிரமத்தை மேற்கொண்டது? எந்த மகானிடம் ஆசிரமம் வாங்கிக் கொண்டது? எத்தனை நாள் ஆயிற்று? ஆசிரமம் வாங்கிக் கொண்ட பிறகு எங்கெங்கே போய் வந்தது? இந்த நகரத்தில் எத்தனை நாள் தங்குவதாக உத்தேசம்? எல்லாம் விவரமாகச் சொல்ல வேண்டும். காமாட்சி! நீ சமையலறைக்குப் போய்க் கொஞ்சம் கவனி. சாஸ்திரோக்தமாகச் சுவாமிகளுக்கு பிக்ஷை பண்ணிவைக்க வேண்டும். ஒரு குறைவு ஏற்படக்கூடாது. தெரிகிறதா?" என்றார்.

"நன்றாய்த் தெரிகிறது. எல்லாம் ஒரு குறைவுமில்லாமல் நடந்துவிடும். நீங்கள் கவலைப்பட வேண்டாம்!" என்று சொல்லிவிட்டுக் காமாட்சி அம்மாள் பின் கட்டுக்குச் சென்றாள். அவளுடன் வஸந்தியும் போனதைப் பார்த்த பால சந்நியாசி, "வஸந்தி! என்னை ஞாபகம் இல்லையா? பேச மாட்டேன் என்கிறாயே?" என்றார். வஸந்தி அப்படியும் சுவாமியாருடன் பேசாமல் பாட்டியைக் குனியச் சொல்லி அவள் காதோடு, "ஏன், பாட்டி! சூரியா மாமா எதற்காகத் தலையை மொட்டை அடித்துக் கொண்டிருக்கிறார்! திருப்பதிக்குப் போய் விட்டு வந்தாரா?" என்று கேட்டதும் எல்லாரும் சிரித்து விட்டார்கள்.

வஸந்தியையும் அழைத்துக்கொண்டு காமாட்சி அம்மாள் பின் கட்டுக்குச் சென்ற பிறகு சாஸ்திரியார், "ஆமாம்; தாங்கள் எப்படி இந்த ஆசிரமத்தை மேற்கொண்டது? ஏதோ காங்கிரஸில் சேர்ந்து 'குவிட் இந்தியா' இயக்கத்துக்குப் பாடுபட்டுக் கொண்டிருப்பதாகச் சொன்னார்களே?" என்றார்.

"ஆம்; அதுவும் உண்மைதான். 'குவிட் இந்தியா' இயக்கத்துக்காகத்



தான் ஊர் சுற்றிக்கொண்டிருந்தேன். ஹரித்துவார் போயிருந்த சமயத்தில் அங்கே ஒரு சுவாமியாரைத் தரிசித்தேன். தரிசித்த வேளை விட்டகுறை வந்து தொட்டுக் கொண்டது. அவரிடம் சிஷ்யனாகி ஒரு வருஷம் இருந்து தொண்டு செய்தேன். பிறகு ஆசிரமம் பெற்றுக் கொண்டு க்ஷேத்திர யாத்திரை செய்து வருகிறேன். இப்போது ராமேசுவரத்துக்குப் போய் விட்டுத் திரும்பி வருகிறேன்!" என்றார் பால சந்நியாசி.

"தங்களுடைய பூர்வீகர்களிலே யாராவது மகான்கள் இருந்து யாக யக்ஞங்கள் செய்திருக்க வேண்டும். அதனாலேதான் இந்தப் பிராயத்தில் இப்படிப்பட்ட பாக்கியம் தங்களுக்குக் கிடைத்தது. ஈரேழு பதினாலு தலைமுறையும் தங்களால் கடைத்தேறப் போகிறது. இந்த நகரிலே எத்தனை நாள் தங்குவதாக உத்தேசம்?"

"இன்றைக்கும் நாளைக்கும் இருந்து விட்டு நாளை மறுநாள் புறப்படலாம் என்று நினைக்கிறேன்."

"அதெல்லாம் கூடவே கூடாது. இங்கே ஒரு மாதமாவது தங்கியிருக்க வேண்டும். இருக்கிற வரையில் நம்முடைய கிரஹத்திலேயே பிக்ஷை, பூஜை எல்லாம் வைத்துக் கொள்ளலாம். சர்வக்ஞ சங்கத்தின் ஆதரவில்



உபந்நியாசங்களுக்கு ஏற்பாடு செய்திறேன். ஸநாதன தர்மத்தைப்பற்றியும் முக்கியமாக வர்ணாசிரம தர்மத்தைப் பற்றியும் உபந்யாசம் செய்ய வேண்டும். ஹிந்து சமூகத்தில் சந்நியாசத்துக்கு எவ்வளவு பெருமை என்பதை எல்லாரும் மறந்து விட்டார்கள். பரிவ்ராஜக சர்மாவைப் போன்ற படித்த முட்டாள்கள் கூட இந்த விஷயத்தில் தப்பபிப்பிராயம் வைத்துக் கொண்டிருக்கிறார்கள். தங்களுடைய உபந்நியாசங்கள் அவர்களை யெல்லாம் வாயடைத்துப் போகும்படி செய்ய வேண்டும்.''

இந்தச் சமயத்தில் வாசற்பக்கமிருந்து ஒரு இளம் பெண்மணி உள்ளே வந்தாள். அவள் தூய வெள்ளைக் கதருடை தரித்திருந்தாள். தலையில் கூந்தல் மாத்திரம் மிக்க நவநாகரிக முறையில் 'பாப்' செய்யப்பட்டுப் பாட்டையாகத் தொங்கியது. ஆனால் நடையுடை பாவனை யெல்லாம் அடக்கமாக இருந்தன.

"நமஸ்காரம் மாமா! சௌக்கியமா? மாமி உள்ளே சமையலறையில் இருக்கிறாரா?'' என்று கேட்டுக்கொண்டே அவள் பின் கட்டுக்குச் சென்றாள்.

"இந்த அம்மாள் யார்?'' என்று சுவாமியார் கேட்கவும், "உனக்குத் தெரியாதா? இவள் தான் என்னுடைய மூத்த நாட்டுப் பெண். இவளுடைய வாழ்க்கையில் திடீரென்று இந்த மாறுதல் ஏற்பட்டு விட்டது. இவளுடைய சிநேகிதிகள் சிலர் 1942-ஆகஸ்டு இயக்கத்தில் சிறைக்குப் போயிருக்கிறார்களாம். இவளுடைய இன்னொரு சிநேகிதி பர்மாவில் நேதாஜி சுபாஷ் பாபுவின் ஐ.என்.ஏ.யில் சேர்ந்திருக்கிறாளாம். இதெல்லாம் சேர்ந்து இவளையும் இப்படிக் கதர் காங்கிரஸ் பைத்தியமாக அடித்து விட்டது. ஆனால் மொத்தத்தில் நல்ல மாறுதல் தான். இவள் இந்த வீட்டுக்கே வந்து இருப்பதாகக் கூடச் சொல்கிறாள். மூத்த பையனும் வருவதாகச் சொல்கிறான். ஆனால் நான் தான் கொஞ்ச காலம் போகட்டும் என்று சொல்லிக் கொண்டிருக்கிறேன். இவளை இங்கிருக்கும் போது போலீஸ்காரர்கள் வந்து பிடித்துக் கொண்டு போனால், என்னுடைய பென்ஷனுக்கு அல்லவா ஆபத்து வந்து தொலையும்?''

"ஆனால் தங்கள் பென்ஷனுக்கு இப்போது ஆபத்து வந்தாலும் சுயராஜ்யம் வந்தவுடன் பென்ஷனும் திரும்பி வந்து விடும் அல்லவா?''

"வரலாம், வரலாம். ஆனால் இந்த மாதிரி இளம் பெண்கள் வேலை செய்து தானா இந்தியாவுக்குச் சுயராஜ்யம் வரப்போகிறது? மகாத்மா காந்தி, வல்லபாய் படேல், ஜவாஹர்லால் நேரு முதலியவர்கள் சிறை புகுந்த தற்கே சுயராஜ்யம் வரவில்லையே?''

"அப்படியானால் இந்தியாவுக்குச் சுயராஜ்யம் வரவே வராது என்று நினைக்கிறீர்களா?'' என்றார் சந்நியாசி.

"யார் சொன்னது? இந்தியாவுக்குச் சுயராஜ்யம் கட்டாயம் வரத்தான் போகிறது. ஆனால் இவர்களாலெல்லாம் வரப் போவதில்லை; கடவுளுடைய சித்தத்தினால் வேறு வழியில் வரப்போகிறது. கலி புருஷர் ஜெர்மனியில் அவதாரம் எடுத்திருக்கிறார். ஹிட்லரைத் தான் சொல்கிறேன். ஹிட்லர் ருஷியாவின் மேல் படையெடுத்தது முட்டாள்தனம் என்று சில பிரகஸ்பதிகள் இங்கே சொல்கிறார்கள். ஹிட்லரை விட இவர்கள் மேதாவிகள் என்கிற எண்ணம். ஆனால் ருஷியாவில் ஹிட்லர் படையெடுத்தது தெரியாத் தனத்தினாலா? பாதி பனி உறைந்த பிரதேசமும் பாக்கிப் பாதி பாலைவனமுமாக இருக்கும் ருஷியாவைப் பிடித்து ஆக வேண்டிய காரியந்தான் என்ன? ஹிட்லர் ருஷியாவின் மீது படையெடுத்ததே இந்தியாவை நோக்கமாக வைத்துக் கொண்டுதான்! ஸ்டாலின் கிராடைப் பிடித்ததும் ஒரே தாவல், இந்தியாவிலே ஆகாச விமானத்தில் வந்து இறங்கப் போகிறார். ஐம்பதினாயிரம் ஆகாசக் கப்பல்களில் துருப்புகளும் வந்து இறங்கப் போகின்றன. ஹிட்லர்தான் ஸ்பஷ்டமாகச் சொல்லி விட்டாரே, உலகத்திலேயே ஆரிய ஜாதிதான் உயர்ந்த ஜாதி என்று? அப்படியானால் இந்தியாவிலேதானே உலக சாம்ராஜ்யத்தின் தலைநகரத்தை ஸ்தாபித்தாக வேண்டும்? ஹிட்லர் இந்தியாவில் வந்து இறங்கிய உடனே செய்யப் போகிற முதல் வேலை என்ன தெரியுமா? 'ஜாதி வித்தியாசம் கூடாது' என்று சில பிரகஸ்பதிகள் உளறிக் கொண்டிருக்கிறார்களே

அவர்கள் எல்லாரும் தலையிலே துணியைப் போட்டுக்கொள்ள வேண்டியது தான்! உலகத்திலுள்ள ஜனங்களையெல்லாம் அடால்ப் ஹிட்லர் நான்கு வர்ணங்களாகப் பிரித்துவிடப் போகிறார். அப்போது தெரியப் போகிறது வர்ணாசிரமத்தின் பெருமை! பிழைத்துக் கிடந்தால் நானும் பார்க்கத்தான் போகிறேன்..."

அங்கே தேவப் பட்டணத்தில் தாமோதரம்பிள்ளை "ஜப்பான்காரன் வந்து எல்லாச் சாதிகளையும் ஒன்றாக்கப் போகிறான்" என்று சொன்னதையும், இங்கே சாஸ்திரிகள் "ஹிட்லர் வந்து வர்ணாசிரம தர்மத்தை நிலை நாட்டப் போகிறார்" என்று சொல்லுவதையும் மனத்திற்குள் சுவாமியார் ஒப்பிட்டுப்பார்த்துக்கொண்டார். அதனால் தன்னை மீறி வந்த சிரிப்பை அடக்கிக் கொண்டு, "ஆனால் சில பேர் ஹிட்லர் ருஷியாவில் காலை வைத்தபடியால் தோற்றுப் போய்விடுவார் என்று சொல்கிறார்களே!" என்றார்.

"அப்படிச் சிலபேர் உளறிக்கொண்டிருக்கிறார்கள். நானும் கேட்டுத்தான் இருக்கிறேன். இவர்கள் இப்படி உளறினால் நடக்கவேண்டியது நடக்காமல் போய்விடுமா? ஹிட்லர் எப்பேர்ப்பட்ட வாழ்க்கை நடத்துகிறார் என்பது தெரியுமல்லவா? மாமிசம் சாப்பிடுவதில்லை; மதுபானம் செய்வதில்லை; ஸ்திரீகளின் முகத்தில் விழிப்பதில்லை. ஏதோ மகாத்மா காந்தி தாயாருக்கு வாக்குக் கொடுத்து நிறைவேற்றியதைப் பற்றிப் பிரமாதமாய்ப் பேசுகிறார்களே? ஒருவருக்கும் வாக்குக் கொடுக்காமலே ஹிட்லர் அப்பேர்ப்பட்ட வைராக்கிய புருஷராயிருக்கிறார். பிறந்ததிலிருந்து பிரம்மசரிய விரதம். சுவாமிகளே! ஹிட்லரைச் சாதாரண மனுஷன் என்று எண்ணிவிட வேண்டாம். அவர் ஹடயோகி; கலி புருஷனுடைய அவதாரம். ஸம்ஸ்கிருத பாஷையைக் கரைத்துக் குடித்த மகா பண்டிதர்கள் இப்போது ஜெர்மனியில் தான் இருக்கிறார்கள் என்பது தெரியும் அல்லவா? ஒரு நாள் ஜெர்மன் ஸயண்டிஸ்டுகளையெல்லாம் ஹிட்லர் கூப்பிட்டார். 'உங்கள் அசட்டு ஆராய்ச்சிகளையெல்லாம் மூட்டை கட்டி வையுங்கள்; அதர்வண வேதத்தைக் கையில் எடுத்



மன்னார்குடி தாலுகா, வட்டார் கிராமம் ஸ்ரீ என். கனகசபைப் பிள்ளையின் குமாரர் ஸ்ரீ கிருஷ்ணஸ்வாமி (மானேஜிங் டைரக்டர், எலக்ட்ரிகல்ஸ் (இந்தியா) லிமிடெட், 24-பி, ஹமாம் தெரு, பம்பாய்) மின்சார தொழிலின் இன்றைய அபிவிருத்தியை அறிந்து கொள்ளவும், எலக்ட்ரிகல் சாமான்களை ஏற்றுமதி செய்யும் ஐக்கிய நாட்டுக் கம்பெனிகளுடன் நேரில் தொடர்பு வைத்துக் கொள்ளவும், 14-9-48-ல் ஏர் இந்தியா விமான மூலம் அமெரிக்காவுக்குப் புறப்பட்டார்.

ஸ்ரீ கிருஷ்ணஸ்வாமி 1927-ல் பம்பாய் சென்றார். 1930-ல் ஒத்துழையாமை இயக்கத்தில் சேர்ந்து ராஜாஜியின் அமைப்பின்மேல் வேதாரண்யம் உப்பு சத்தியாக்கிரகத்தில் பங்கெடுத்துக் கொண்டு பத்து மாத சிறைவாசம் செய்தார். அவர் நூல் நூற்பதிலும் கதராடை நெய்வதிலும் தேர்ந்தவர். ஒரு பிரபல எலக்டிரிக் கம்பெனியின் மானேஜராக 1946 வரை இருந்து பிறகு தமது சொந்த ஸ்தாபனத்தை ஆரம்பித்து திறமையாகவும் நடத்தினார்; இப்பொழுது இந்திய கவர்ன்மெண்டு இண்டஸ்ட்ரீஸ் அண்டு ஸப்ளைஸ் டிபார்ட்மெண்டுக்கும், ரயில்வேக்கும், முனிசிபாலிடிகளுக்கும் இதர எலக்ட்ரிக் கம்பெனிகளுக்கும் இந்தியாவில் விநியோகஸ்தராக இருக்கிறார்.

அமெரிக்காவிலுள்ள பல உற்பத்தியாளர்களைப் பார்த்து விட்டு அவர் பாரிஸ் சென்றிருக்கிறார். ஜெர்மனி, பெல்ஜியம், ஹாலந்து, செக்கோஸ்லோவேகியா, ஸ்விட்ஜர்லாந்து, இத்தாலி முதலிய தேசங்களுக்கெல்லாம் போய் இம்மாதக் கடைசியில் பம்பாய் திரும்புகிறார். 1949-ல் சென்னையில் ஒரு கிளை ஸ்தாபனம் திறப்பதாக இருக்கிறார். பெங்களூரில் ஏற்கெனவே ஒரு கிளை ஸ்தாபனம் ஆரம்பிக்கப் பட்டிருக்கிறது. அவர் அமெரிக்காவிலோ அல்லது தம் தேசத்திலோ சிறந்த உற்பத்தியாளருடன் வியாபார ஒப்பந்தம் செய்து கொள்ளலாம் என்று தெரிகிறது.

அவருடைய நண்பர்கள் அவருக்கும் பிரிவுபசாரம் செய்து அனுப்பினர்.

துக் கொள்ளுங்கள்' என்றார். ஜெர்மன் ஸயன்டிஸ்டுகள் அப்படியே செய்தார்கள். அதன் பலன் என்ன? வி. ஒன்று, வி. இரண்டு, வி. மூன்று என்பதாகப் புதுப் புது ஆயுதங்கள் புறப்பட்டுக்கொண்டேயிருக்கின்றன! இங்கிலீஷ்காரன், அமெரிக்கன், ருஷியன் எல்லாரும் முழி முழி யென்று முழிக்கிறார்கள்! எல்லாம் அதர்வண வேதத்திலுள்ள இரகசியம் என்று இவர்களுக்கெல்லாம் தெரியாது. இன்னும் ஒரு விஷயம் தெரியுமோ இல்லையோ? ஹிந்து ஜோதிஷ சாஸ்திரத்தின்படி நாள் நட்சத்திரம் பார்த்துக் கொண்டு தான் ஹிட்லர் ஒவ்வொரு காரியத்தையும் ஆரம்பிக்கிறார். ஜெக்கோஸ்லோவேகியா மீது படையெடுத்த போதும் அப்படி; போலந்துக்குப் புறப்பட்ட போதும் அப்படி; பிரான்ஸைப் பிடிக்கக் கிளம்பிய போதும் அப்படி! இல்லாவிட்டால் அப்பேர்ப்பட்ட நெப்போலியன் பிறந்த பிரான்ஸு தேசத்தைப் பத்தே நாளில் பிரியைக் கட்டி இழுத்திருக்க முடியுமா? நான் சொல்லுகிறது என்ன?" என்று சாஸ்திரியார் நிறுத்தினார்.

"கவனமாகக் கேட்டுக் கொண்டிருக்கிறேன்!" என்று பால சந்நியாசி பட்டுக் கொள்ளாமல் சொன்னார்.

"கவனமாகக் கேட்டு என்ன பிரயோஜனம்? மனதிலே வாங்கிக் கொள்ள வேண்டும். இன்னொரு சர்வ இரகசியமான விஷயம். நாள் நட்சத்திரம் பார்த்துச் சொல்வதற்கு ஹிட்லர் எப்பொழுதும் பக்கத்திலேயே வைத்துக் கொண்டிருக்கிற ஆசாமி யார் என்று தெரியுமா?"

"அது யார்? தெரியாதே?"

"நான் சொல்லுகிறேன். மன்னார்குடி பஞ்சு சாஸ்திரிகள் என்று பிரசித்தமாயிருந்தாரே, தெரியுமோ இல்லையோ? நாலுவேதம் ஆறு சாஸ்திரம் தெரிந்த மகான். அவருடைய சாக்ஷாத் பெண் வயிற்றுப் பேரன் பிச்சு சாஸ்திரிகளைத்தான் எப்போதும் ஹிட்லர் தன் பக்கத்திலேயே வைத்துக் கொண்டிருக்கிறாராம். எப்பேர்ப்பட்ட ஜெனரல் ஆகட்டும், பீல்டு மார்ஷல் ஆகட்டும், சீப் ஆப் ஸ்டாப் ஆகட்டும், யார் வந்து 'இது தான் சமயம்; படை கிளம்ப வேண்டும்' என்று சொன்னாலும் ஹிட்லர் 'ஊஹூம்' என்று சொல்லிவிடுவாராம். பிச்சு சாஸ்திரிகள் பஞ்சாங்கத்தைப் புரட்டிப் பார்த்துப் 'படை கிளம்பலாம்' என்று சொன்னால் தான், புறப்பட உத்தரவு கொடுப்பாராம்! அதன் பலன் என்ன? ஜயத்துக்கு மேல் ஜயம்! வெற்றிக்குமேல் வெற்றி! உலகமே ஹிட்லரின் காலடியில் வந்து கொண்டிருக்கிறது. அங்கே ஹிட்லர் நம்முடைய சாஸ்திரங்களுக்கு அவ்வளவு மதிப்புக் கொடுக்கிறார். இங்கே சில பிரகஸ்பதிகள் 'பழம் பஞ்சாங்கம்' என்று பரிகாசம் செய்கிறார்கள்! என்னத்தைச் சொல்கிறது? எந்தக் குட்டிச்சுவரிலே போய் முட்டிக் கொள்கிறது என்று கேட்கிறேன்."

இவ்விதம் சாஸ்திரியார் சரமாரியாகப் பொழிந்ததைச் சந்நியாசி வேறு வழியின்றிக் கேட்டுக் கொண்டிருந்தார். இவ்வளவு படித்த மனிதர், பி. ஏ., பி. எல்., பட்டம் பெற்றவர், ஸப் ஜட்ஜு உத்தியோகம் பார்த்தவர், உலக அனுபவம் பெற்றவர்—இத்தகைய குருட்டு நம்பிக்கைகளைப் பிடிவாதமாகப் பிடித்துக் கொண்டிருப்பது குறித்து அவருடைய மனதில் ஒரு பகுதி ஆச்சரியப் பட்டுக் கொண்டிருந்தது. பரம்பரையாக வந்து இரத்தத்தில் ஊறிப்போன நம்பிக்கைகளைக் கைவிடுவது அவ்வளவு எளிதான காரியமல்ல போலும் என்று எண்ணினார். அதே சமயத்தில் அவருடைய மனதில் இன்னொரு பகுதி 'இவருடைய சளசளப்பு எப்போது ஓயும்? காமாட்சியம்மாளிடம் தனியாகச் சீதாவைப் பற்றிப் பேச எப்போது சந்தர்ப்பம் கிடைக்கும்?' என்று எண்ணமிட்டுக் கொண்டிருந்தது.

கடைசியில் சாஸ்திரிகளின் பேச்சை நிறுத்துவதற்குச் சாமியார் ஒரு வழி கண்டு பிடித்தார்.

"நீங்கள் சொல்லுவதெல்லாம் சரியாயிருக்கலாம். ஆனால் இப்படி இரைந்து பேசுகிறீர்களே? இப்போது தான் எங்கே பார்த்தாலும் சி. ஐ. டி.க்காரர்கள் வட்டமிட்டுக் கொண்டிருக்கிறார்களே? யார் காதிலாவது விழுந்து ரிபோர்ட்டு செய்தால் வீண் வம்பு அல்லவா?" என்றார்.

சாஸ்திரியாரின் பிரசங்கம் அந்தக் கணமே பளிச்சென்று ஓய்ந்தது.

# வதனம் அதிக எழிலோங்க—
# பாண்ட்ஸ் இரு க்ரீம்கள்




**ஒன்று சுத்தம் செய்ய - மற்றது பாதுகாக்க!**



உங்கள் வதனம் எப்பொழுதும் ஸ்வச்சமாக, மழமழப்பாக, இளமையுடனிருக்க இருவகை அழகுக் கிரீம்கள் தேவை. முதலாவது, சேர்த்தியாகக் கலவைசெய்த தைலங்களடங்கிய க்ரீம், முகத்தை சுத்தம் செய்து, மிருதுவாக்க - இரண்டாவது, மெழுக்கற்ற க்ரீம், அதிருஸ்யமாக இருந்து பகல் முழுதும் வெய்யில், தூசியினின்று முகத்தைப் பாதுகாக்க.

பாண்ட்ஸ் கோல்ட் க்ரீமால் முகத்தை சுத்தம் செய்யுங்கள். இதமளிக்கும் தைலங்களுள்ள இந்த க்ரீமை தினம் இரவு முகத்திலும் கழுத்திலும் தடவி, மயிர்க்கால்களினுள்ளிருக்கும் அழுக்கை இளக்குமாறு சருமத்தினுள் மெதுவாகத் தேய்த்திடுங்கள். துடைத்துக் கழுவவும். இப்பொழுது பாருங்கள், முகம் எவ்வளவு ஸ்வச்சமாக, மோகன காந்தியுடன் விளங்குகிறது—என்னே மழமழப்பாக!

பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீமால் முகத்தைப் பாதுகாருங்கள். குளுமையான, மெல்லிய, மெழுக்கற்ற இந்த க்ரீமை தினம் காலையில் லேசாகத் தடவுங்கள். அது அதிருஸ்யமாக இருந்து முகத்தை அன்றலர்ந்த மலரென சோபிக்கச் செய்கிறது.





# பாண்ட்ஸ்





வியாபார விவரங்களுக்கு: எல். டி. லேய்பூர் & கோ. (இந்தியா) லிட்.
பம்பாய் - கல்கத்தா - டில்லி - சென்னை - [illegible] - கராச்சி - கொழும்பு - ரங்கூன்

# மாந்தருக்குள் ஒரு தெய்வம்

கல்கி

## 57. உண்ணாவிரத வெற்றி

டிரான்ஸ்வால் சர்க்கார் இந்தியர்களைக் கப்பலேற்றி இந்தியாவுக்குப் பலாத்காரமாக அனுப்பியது சட்ட விரோதமான காரியம். அதோடு, இரக்கமற்ற கொடுமையான காரியம். இந்தியாவைப் பார்த்தே அறியாதவர்களும் டிரான்ஸ்வாலிலேயே பிறந்து வளர்ந்து பிள்ளை குட்டி குடும்பம் உள்ளவர்களையும் திடீரென்று பிடித்துக் கப்பலேற்றி அனுப்பினால் அவர்கள் இந்தியாவுக்குச் சென்று திக்குத் திசை தெரியாமல் தவிப்பது இயற்கையே யல்லவா? இது எவ்விதம் நியாயமாக முடியும்? எந்தச் சட்டந்தான் அதற்கு இடம் கொடுக்கும்?

எனவே, தென்னாப்பிரிக்காவிலும் இந்தியாவிலும் டிரான்ஸ்வால் சர்க்காரின் மேற்படி செயலைப் பற்றித் தீவிரமான கண்டனங்கள் எழுந்தன. கொஞ்ச நாளைக்குப் பிறகு டிரான்ஸ்வால் சர்க்கார் மேற்படி சட்ட விரோதமான முறையைக் கைவிட வேண்டியதாயிற்று. ஆனால் அதற்குள்ளே டிரான்ஸ்வால் சர்க்காரின் நோக்கம் ஓரளவு நிறைவேறிவிட்டது. "கப்பல் ஏற்றி இந்தியாவுக்கு அனுப்புகிறார்கள்" என்று தெரிந்த பிறகு சத்தியாக்கிரஹ இயக்கத்தில் சேர்ந்த இந்தியர்கள் பலர் பின்வாங்கத் தொடங்கி விட்டார்கள்.

இந்திய சத்தியாக்கிரஹிகளின் உறுதியைக் குலைப்பதற்கு டிரான்ஸ்வால் சர்க்கார் வேறு கடுமையான முறைகளையும் கையாண்டார்கள். இதுவரையில் எல்லா இந்திய சத்தியாக்கிரஹிகளையும் ஒரே சிறையில் போட்டிருந்ததற்குப் பதிலாக வெவ்வேறு சிறைகளுக்குப் பிரித்து அனுப்பினார்கள். கடுமையான வேலைகள் செய்யும்படி கட்டாயப் படுத்தினார்கள். டிரான்ஸ்வாலில் குளிர்காலத்தில் குளிர் மிகக் கடுமையாயிருக்கும். வேலை செய்யும் கைகள் உறைந்து செயலற்றுப் போகும்.

புதிய சாலை போடும் வேலை நடந்த ஓர் இடத்திற்குச் சில இந்திய சத்தியாக்கிரஹிகளைக் கொண்டு போய்க் கடுமையாக வேலை வாங்கினார்கள். இவர்களில் ஒரு சத்தியாக்கிரஹியின் பெயர் சாமி நாகப்பன். அவன் பதினெட்டு வயது இளம் பிள்ளை. அதிகாலையில் அவனை எழுந்திருக்கப் பண்ணிச் சாலை போடும் வேலை செய்யப் பண்ணினார்கள். சாமி நாகப்பன் கஷ்டத்தைப் பொருட்படுத்தாமல் சொன்ன வேலையைச் செய்துகொண்டிருந்தான். ஒரு நாள் அதிகாலையில் வேலை செய்தபோது குளிரினால் 'டபிள் நிமோனியா' என்னும் அபாயகரமான சுரம் வந்துவிட்டது. அதிலிருந்து அவன் தேறவே யில்லை. அந்திய காலம் நெருங்கி விட்டது என்று அறிந்த பிறகு அவனை விடுதலை செய்தார்கள். 1909௵ ஜூலை 7௳ சாமி நாகப்பன் இவ்வுலக வாழ்வை நீத்தான்.

காந்தி மகாத்மா எழுதியிருக்கிறார்:— "நாகப்பனுக்குக் கடைசி மூச்சு இருந்த வரையில் சத்தியாக்கிரஹ இயக்கமே நினைவாயிருந்தான். அதைப் பற்றியே பேசினான். கனவிலும் சத்தியாக்கிரஹத்தைப் பற்றியே பிதற்றினான். இயக்கத்தில் சேர்ந்து சிறை சென்றது பற்றி அவன் வருத்தப்படவே யில்லை. நண்பனை அன்புடன் தழுவி வரவேற்பது போல் அவன் மரணத்தை வரவேற்றான். தற்காலத்தில் 'படித்தவன்' என்பதற்கு நாம் பொருள் கொள்ளும் முறையில் நாகப்பன் படித்தவன் என்று சொல்ல முடியாது. ஆனால் அவனுடைய பொறுமையும் தேசபக்தியும் தியாக உணர்ச்சியும் மன உறுதியும் இணையின்றி விளங்கின. சாமி

நாகப்பனைப் போன்ற பலர் இயக்கத்தில் சேர்ந்திரா விட்டால் சத்தியாக்கிரஹம் நடந்திருக்கவே முடியாது.''

இந்தியர்களின் மன உறுதியைக் குலைப்பதற்கு டிரான்ஸ்வால் சர்க்கார் இன்னும் பல கொடுமையான முறைகளையும் கையாண்டார்கள். அபாயகரமான முரட்டுக் கைதிகளை வைப்பதற்கு என்று டிரான்ஸ்வாலில் ஒரு தனிச் சிறைச்சாலை இருந்தது. இதற்குப் பெயர் 'டீப்குலூப்' சிறை. இந்தச் சிறையின் அதிகாரியாக முரட்டுத்தனத்துக்குப் பெயர்போன ஜெயிலர் ஒருவர் இருந்தார். சாதுக்களான இந்திய சத்தியாக்கிரஹிகள் சிலரை இந்த 'டீப்குலூப்' சிறைக்கு அனுப்பினார்கள். இங்கே ஜெயிலர் கொடுத்த கடுமையான வேலைகளையெல்லாம் இந்தியர்கள் செய்தார்கள். ஜெயிலர் எந்த அளவு வேலை கொடுத்தாரோ அந்த அளவைப் பூர்த்தி செய்தார்கள். அப்படியும் ஜெயிலருக்குத் திருப்தி உண்டாகவில்லை. இந்தியர்களுடைய உறுதியைக் குலையச் செய்வது அல்லவா அங்கே அவர்களை அனுப்பியதன் நோக்கம்? எனவே, இந்தியர்களைக் கடுமையாக வேலை வாங்கியது போதாது என்று ஜெயிலர் அவர்களை அவமதிப்பதும் திட்டுவதும் அதிகமாகி வந்தது. இதை இந்தியர்களால் பொறுக்க முடியவில்லை. "ஒன்று, எங்களை இந்தச் சிறையிலிருந்து மாற்ற வேண்டும்; அல்லது ஜெயிலரை மாற்ற வேண்டும்" என்று கோரிக்கை செய்துவிட்டு, உண்ணாவிரதம் இருக்கத் தொடங்கினார்கள். அந்த நாளில் தென்னாப்பிரிக்கா சிறையில் அடைக்கப்பட்ட இந்திய சத்தியாக்கிரஹிகளுக்குப் பரிகாரம் தேட வேறு உபாயமே கிடையாது. சிறைக்கு உள்ளே என்ன நடக்கிறதென்பது வெளியே உள்ளவர்களுக்குத் தெரியாது. கைதிகளை வெளியார் சென்று பார்க்கவும் முடியாது. ஆகவே வெளியில் பொதுஜனக் கிளர்ச்சி ஏற்படுவதற்கு வழியில்லை. உண்ணாவிரதம் இருப்பதாகச் சொல்லிவிட்டு இந்தக் காலத்தில் சிலர் இரகசியமாகக் கொஞ்சம் சாப்பிட்டுக்கொண்டு நெடுநாள் காலம் கழிப்பது உண்டு. இந்தமாதிரி மோசடி செய்வதற்குத் தென்னாப்பிரிக்காவில் மார்க்கமே யில்லை. பட்டினி என்றால், முழுப் பட்டினிதான். "பட்டினி கிடந்து சாகட்டும்" என்று சிறை அதிகாரிகள் பிடிவாதமாக இருந்திருந்தால் சாகவேண்டியது தான். அவர்கள் இறந்துபோன விவரங்கள் கூட வெளியில் உள்ளவர்களுக்கு உடனே தெரிவதற்கு வழி யில்லை. இப்படியெல்லா மிருந்தும், 'டீப்குலூப்' சிறையிலிருந்த இந்திய சத்தியாக்கிரஹிகள் உண்ணாவிரதம் தொடங்கி அந்த விரதத்தில் உறுதியாக நின்றார்கள். காந்தி மகாத்மாவின் ஆத்ம சக்தி அவர்களை ஆட்கொண்டு அத்தகைய மனோதிடத்தை அவர்களுக்கு அளித்திருந்தது. சத்தியத்துக்கும் அஹிம்சைக்கும் எள்ளளவும் மாறுபடாத அந்த சத்தியாக்கிரஹிகளின் உண்ணாவிரதம் கடைசியாகப் பூரண வெற்றி அளித்தது. ஏழு நாள் விரதம் இருந்த பிறகு அவர்களை அந்தச் சிறையிலிருந்து வேறு சிறைக்கு மாற்றச் சர்க்காரிடமிருந்து உத்தரவு வந்தது.

• • •

சத்தியாக்கிரஹப் போர் இவ்வாறு நடந்து வருகையில் தென்னாப்பிரிக்காவின் அரசியலில் ஒரு பெரிய மாறுதல் நிகழ்வதற்கு ஆயத்தங்கள் நடந்து கொண்டிருந்தன. இதுவரையில் டிரான்ஸ்வால், நேட்டால், ஆரஞ்சுபிரீஸ்டேட் முதலிய மாகாணங்கள் தனித்தனி அரசியலுடன் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தோடு நேராகப் பிணைக்கப்பட்டிருந்தன. தென்னாப்பிரிக்காவிலுள்ள எல்லா மாகாணங்களையும் ஓர் ஐக்கிய சர்க்காருக்கு உட்படுத்தி, பிரிட்டிஷ் சர்க்கா

சோடு ஒருமுக சம்பந்தம் வைத்துக்கொள்வது பற்றி யோசனைகள் நடந்தன. தென்னாப்பிரிக்காவில் வசித்த இங்கிலீஷ்காரர்கள், போயர்கள் — ஆகிய இரு சாராரும் மேற்படி யோசனையை ஒப்புக்கொண்டு பிரயத்தனம் தொடங்கினார்கள். இப்படி ஐக்கியப்பட்டு ஏக அரசாங்கம் ஆவதினால் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தில் தென்னாப்பிரிக்காவின் அந்தஸ்து உயரும் என்று கருதினார்கள். இந்த யோசனைக்கு நல்ல ஆதரவு இருப்பதாகத் தெரிந்ததும் போயர்களின் சார்பாகவும் ஆங்கிலேயர் சார்பாகவும் இங்கிலாந்துக்குத் தூது கோஷ்டிகள் சென்றன. ஜெனரல் போதாவும் ஜெனரல் ஸ்மட்ஸும் போயர் கோஷ்டிக்குத் தலைமை வகித்துச் சென்றார்கள்.

தென்னாப்பிரிக்கா மாகாணங்கள் ஓர் அரசாங்கமாக ஐக்கியப்படும்போது இந்தியர் நிலைமை மேலும் மோசமாகலாம் என்று காந்திஜி கருதினார். இப்போது ஒவ்வொரு மாகாணத்திலும் சிற்சில சட்டங்கள் இந்தியருக்குப் பாதகமாயிருந்தன. தென்னாப்பிரிக்கா ஐக்கியப்பட்டு விட்டால், இந்தியருக்கு விரோதமாக ஒவ்வொரு மாகாணத்திலும் உள்ள சட்டங்கள் எல்லாம் சேர்ந்து தென்னாப்பிரிக்கா முழுவதிலும் அமுலுக்கு வரலாம். இந்தியர்களின் கஷ்டம் மேலும் அதிகமாகலாம். எனவே, தென்னாப்பிரிக்கா அரசியல் நிலைமை இங்கிலாந்தில் விவாதிக்கப்படும் சமயத்தில் இந்தியர்களின் சார்பாக அங்கு யாராவது இருக்கவேண்டும் என்று காந்திஜியும் மற்றத் தலைவர்களும் கருதினார்கள். இந்தத் தடவை காந்திஜியும் சேத் ஹாஜி ஹபீப் என்னும் முஸ்லிம் வர்த்தகரும் இங்கிலாந்துக்குப் போவது என்று நிச்சயமாயிற்று. அப்படியே 1909-ம் வருஷம் ஜூன் மீ 23உ கேப் டவுனிலிருந்து புறப்பட்ட 'கெனில் வொர்த் காஸில்' என்ற கப்பலில் காந்திஜி, சேத் ஹாஜி ஹபீப் இருவரும் புறப்பட்டார்கள்.

# காலக்ஷேபம்

### சங்கடம்!

**காதலன்:**— அன்பே, நான் சேகரனைப் போல லக்ஷாதிபதியாக இல்லாவிட்டாலும் என் சம்பாத்தியம் நம் இருவருக்கும் போதும். அவனிடம் ஏராளமான செல்வம் இருக்கிறது என்பது உண்மைதான். ஆனால், நான் உன்னிடம் வைத்திருக்கும் அன்புக்கு எதுவும் இணையாகாது. இதை நீ நம்புவாயா?

**காதலி:**— நன்றாய்க் கேட்டீர்கள்! உங்களது ஆழ்ந்த அன்புக்கு இணை ஏது?— அது இருக்கட்டும்; அந்தச் சேகர் என்பவர் யார்? அவர் எங்கே இருக்கிறார்?

★

### கட்டுக் கதை

**நீதிபதி** (கூண்டில் நிற்கும் கைதியைப் பார்த்து):— வாதியின் சட்டைப் பையிலிருந்த ஒரு தங்கக் கடிகாரம் தவிர மற்றதையெல்லாம் நீ திருடியிருக்கிறாய்; உன்னைத் தண்டிக்காமல் நான் விடப்போவதில்லை.

**கைதி:**— இல்லவே இல்லை, எஜமானே! அவர் சட்டைப் பையில் தங்கக் கடிகாரம் இல்லவே இல்லை! இதிலிருந்தே அவர் என் மீது சுமத்திய குற்றம் வெறும் கட்டுக் கதையென்பது வெளியாக வில்லையா!

### குளிர் இல்லை!

**பேரன்:**— தாத்தா, தாழ்வாரத்திலே உட்கார்ந்திருக்கிறீர்களே! குளிர் பல்லெல்லாம் கிட்டிப்போகும்படி நடுக்குகிறதே! கூடத்தில் உட்கார்ந்துகொள்ளுகிறதுதானே?

**தாத்தா:**— போடா, அசடே! என்னுடைய பற்களையெல்லாம் அலமாரியிலே அல்லவா வைத்திருக்கிறேன்?

★

### சுலபம்!

**ஒருவர்** (ஒரு பெரிய மனிதரைப் பார்த்து):— ஸார், பத்து நிமிஷம் ஒரு கூட்டத்தில் பேச வேண்டுமானால் எத்தனை நாழிகைக்கு முன் நீங்கள் உங்களுடைய பிரசங்கத்தைத் தயார் செய்துகொள்வீர்கள்?

**பெரிய மனிதர்:**— பத்து நிமிஷப் பேச்சுக்கு இரண்டு வாரம் சிந்தித்துத் தயார் செய்துகொள்வேன்!

**ஒருவர்:**— ஒரு மணி நேரம் பேசவேண்டுமானால்......?

**பெரிய மனிதர்:**— ஒரு வாரம் அவகாசம் வேண்டும்!

**ஒருவர்:**— இரண்டு மணி நேரம் பேச வேண்டுமானால்......?

**பெரிய மனிதர்:**— அவகாசமே வேண்டாம்; இப்போதே தயார்!



# தீராத இருமல், ஜலதோஷம் இன்புளுயன்சாவுக்கு உங்களுக்கு பெப்ஸ் தேவை

ருசியுள்ள பெப்ஸ் மாத்திரை, மருந்து சத்துக்களை சுவாசத்துடன் கலந்து வியாதிக்கு மூலமான பாகத்திற்கு அனுப்பி, துரிதமாக குணமளிக்கின்றன. பெப்ஸ் மாத்திரை வாயில் கரையும் போதே அதன் உயர்ந்த கிருமி நாசன மருந்து சத்துக்கள் இருமலை நிறுத்தி, கெட்டுபோன சுவாசக் குழாய்களுக்கு இதமளித்து, கிருமிகளைக் கொன்று, சளிக் கட்டைத் தகர்த்து மார்புக்கும் தொண்டைக்கும் விரைவில் குணமளிக்கிறது.



படத்தில் பெப்ஸ் மருந்துச் சத்துக்கள் எவ்வாறு சுவாச மார்க்கத்தின் ஒவ்வொரு பாகத்தையும் அடைகிறது என்பதை விளக்குகிறது.

# PEPS




சுவாச, ஹிருதய கிருமி நாசன மாத்திரைகள் தொண்டை, சுவாசசயம், மார்பு நோய்களுக்கு நிவாரணமளிக்கும் சிறந்த ஔஷதம்

ஏஜண்டுகள்: மெஸர்ஸ். தாதா அன் கோ., பி. டி., மதராஸ்

No. 3

## சிறந்த இங்கிலீஷ் பம்பு செட்டுகள்

எலக்டிரிக் மோட்டார் அல்லது
ஆயில் இஞ்ஜினால் ஓட்டக் கூடியது

### விவசாயம், வீட்டுத் தேவைகளுக்கான பல ரகங்கள்

•

முழு விவரங்களுக்கு:

**SEEYENSEE & Co.,**
19, Loane Square
BROADWAY :: MADRAS - 1

Phone: 4010
Grams: "SEEYENSEE"
Post Box No. 1609

# நாவலர் விதைத்த விதை

ரஜனி

கொழும்பு, டிஸம்பர், 6.

இலங்கையில் தமிழும் சைவமும் காத்த ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவலரின் திருநாள் கொழும்பு, நாவலப்பட்டி, மட்டக்களப்பு, யாழ்ப்பாணம் முதலான தமிழர்கள் வாழும் இடங்களிலெல்லாம் இவ்வருடம் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. இலங்கையில் டச்சு, போர்ச்சுகேஸிய ஆட்சி நடந்த காலத்தில் சைவ மதத்தை அடியோடு ஒழித்துவிடத் தீவிரமான நடவடிக்கைகளைக் கையாண்டார்கள். கிறிஸ்தவ மதத்தைத் தழுவியவர்களுக்கு மட்டும் சர்க்கார் உத்தியோகங்கள் அளிக்கப்பட்டன. ஆங்கிலேய ஆட்சி ஏற்பட்டவுடன் அவர்கள் தமிழையே ஒழித்துவிட முயற்சித்தனர். அதன் பயனாகத் தமிழர்கள் தங்களைச் சைவர்களென்று சொல்லிக் கொள்ளவோ அல்லது வீட்டுக்கு வெளியே தமிழில் பேசவோ பயந்தனர்.

இப்படிப்பட்ட ஒரு சோதனை மிகுந்த காலத்தில்தான் ஆறுமுக நாவலர் பெருமான் அவதரித்தார். கிறிஸ்தவப் பள்ளிக்கூடத்தில் சேர்ந்து சேவை புரிந்து பைபிளை அற்புதமாகத் தமிழில் மொழிபெயர்த்துக் கிறிஸ்தவர்களையெல்லாம் பிரமிக்கச் செய்தார். சக்தி மிகுந்த ஒரு நா வல்லவரை வலைவீசிப் பிடித்து விட்டோமென்று கிறிஸ்தவப் பாதிரிமார்கள் பெரு மகிழ்ச்சியடைந்திருக்க, நாவலர் கிறிஸ்தவக் கல்லூரிகளுக்குள்ளேயே சைவப் பிரசாரம் செய்தார். அதன் பயனாக மூடிக் கிடந்த சைவக் கோவில்களிலெல்லாம் மீண்டும் ஜனங்கள் சென்று பூஜை செய்ய ஆரம்பித்தனர். நாவலர் பெருமான் அவதரித்திராவிட்டால் இன்று இலங்கையிலே தமிழும் சைவமும் இருந்த இடம் தெரியாமல் மறைந்து போயிருக்குமென்று சொல்லுவது மிகையாகாது.

## கூட்டுப் பிரார்த்தனை இயக்கம்

ஜாதி சமய பேதமின்றிச் சகலரும் ஒன்று சேர்ந்து இந்து மதத்தைப் பலப்படுத்த வேண்டுமென்று அன்று நாவலர் பெருமான் உபதேசித்தார். அவருடைய அடிச்சுவட்டைப் பின் பற்றிப் பழுத்த சைவாபிமானிகளான சில பிரமுகர்கள் ஜிந்துப்பட்டிக் கோவிலில் கூட்டுப் பிரார்த்தனை செய்ய ஆரம்பித்தார்கள். வாரந்தோறும் வகுப்பு வேற்றுமையில்லாமல் எல்லோரையும் கூட்டி வைத்து மகாத்மாவின் கோஷ்டிப் பிரார்த்தனையைப் போலக் கூட்டாகப் பஜனை செய்வது, இறைவன் திருநாமாவளிகளைப் பாடுவது, சைவப் பெரியோர்களின் சரித்திரங்களைச் சொல்வது முதலான திருப்பணிகளைச் செய்து வந்தனர். அவற்றுக்குக் கொழும்பு நகரின் நீதிபதியான ஸ்ரீ ஸ்ரீஸ்கந்தராஜா, உதவி கல்வி மந்திரி ஸ்ரீ கே. கனகரத்தினம், ஸ்ரீ ஏ.க. குணசிங்கா போன்றவர்களும் விஜயம் செய்தனர். இப்பொழுது என்னவென்றால் இந்த இயக்கம் இலங்கை முழுவதிலும் பரவி வாரந்தோறும் கூட்டுப் பிரார்த்தனைகள் பல ஊர்களிலும் நடக்கின்றன. மாதத்தில் ஓரிரண்டு தடவை இதை ரேடியோவிலும் ஒலி பரப்புகிறார்கள்.

## புதிய கஷ்டம் தீர்ந்தது!

இங்குள்ள இந்தியர்கள் இந்தியாவிலிருக்கும் தங்களுடைய குடும்பத்துக்குப் பணமனுப்ப வேண்டுமென்றால், இந்தியாவில் குடும்பங்கள் இருப்பதற்கும் அவர்கள் இலங்கையிலிருந்து பணம் வந்துதான் ஜீவிக்க வேண்டுமென்பதற்கும் அத்தாட்சியாக, இந்தியாவில் உள்ள கிராம முனிசிபு, தாசில்தார் முதலியோர்களிடமிருந்து சர்டிபிகேட் வாங்கியனுப்ப வேண்டுமென்று நிபந்தனை போட்டார்கள். இது மிகுந்த கஷ்டத்தை உண்டு பண்ணியது.

இரண்டு வாரங்களுக்கு முன்னால் திடீரென்று இன்னொரு உத்தரவு பிறந்தது. ஜில்லா நீதிபதிகளிடமிருந்து சர்டிபிகேட்டுகள் பெற்றால்தான் பணமனுப்பப் பர்மிட் வழங்க முடியுமென்று செலாவணி அதிகாரி ஒரு நிபந்தனையைப் போட்டார்! கிராமங்களிலுள்ள ஏழை எளிய ஜனங்களும் பெண்களும் வெகுதூரம் சென்று ஜில்லா மாஜிஸ்ட்ரேட்டைக் காண்பதும் அவரிடம் சர்டிபிகேட் வாங்குவதும் அவ்வளவு சுலபமான காரியமா!

நல்லவேளையாகக் கடைசியில் ஸ்ரீ வி.வி. கிரியின் காரியதரிசியான ஸ்ரீ என்.இ.எஸ். இராகவாச்சாரி செலாவணிக் கட்டுப்பாடு அதிகாரியிடம் மன்றாடிப் புதிய உத்தரவு ரத்தாகும்படி செய்தார்.




நினைத்துப் பார்த்தால் எனக்கே வேடிக்கையாய்த்தான் இருக்கிறது—எத்தனையோ பேரைப் பற்றி நான் தெரிந்தவன் போல் எழுதுகிறேன், பேசுகிறேன்—ஆனால் என்னைப் பற்றியே எனக்கு இன்னும் தெரிந்ததாகத் தெரியவில்லை!

இது கதை யல்ல; கற்பனை யல்ல. உண்மை; உண்மையிலும் உண்மை!

என்னைப் பற்றியே நான் இன்னும் தெரிந்துகொள்ளாம லிருக்கும்போது, என் மனைவியைப் பற்றி எனக்கு என்ன தெரியும்?—ஒன்றுமே தெரியாதுதான்!

ஆனால், இந்த அதிசயமான உண்மையை நான் ஒப்புக் கொள்கிறேனா என்றால், அது தான் கிடையாது. ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு மாதமும் ஒவ்வொரு வருஷமும் நான் அவளைப் பற்றி ரொம்ப ரொம்பத் தெரிந்து கொண்டிருப்பவன் போலவே பாவனை செய்து வருகிறேன்!

நான்தான் இப்படி யென்றால் அவளாவது எனக்கு மாறுபட்டிருக்கிறாளா?—அதுவும் இல்லை; அவளும் என்னைப் பற்றி ரொம்ப ரொம்பத் தெரிந்து கொண்டிருப்பவள் போலவே நாளதுவரை பாவனை செய்து வருகிறாள்!

இந்த லட்சணத்தில்தான் எங்களுடைய வாழ்நாட்கள் ஒவ்வொன்றாக எங்களிட மிருந்து விடை பெற்றுச் சென்று கொண்டிருக்கின்றன. அந்த நாட்களைப் பற்றி நாங்களும் கவலைப்படுவதில்லை; எங்களைப் பற்றி அந்த நாட்களும் கவலைப்படுவதில்லை!

அப்படி ஏதாவது ஒரு நாளைப் பற்றி நாங்கள் கவலைப்பட்டோம், அந்த நாளும் எங்களைப் பற்றிக் கொஞ்சம் கவலைப்பட்டது என்றால், அது ஒரே ஒரு நாளாய்த்தான் இருக்க முடியும் — அந்த நாள் எங்கள் வாழ்வில் ஒரு திருநாள்!

அந்தத் திருநாளைப் பற்றிச் சொல்வதற்கு முன்னால் உங்களிடம் ஒரு வெறும் நாளைப் பற்றிச் சொல்ல வேண்டும்; ஆமாம், சொல்லிவிடத் தான் வேண்டும்.

★

அன்றிரவு நான் சாப்பிட்டு முடிந்ததும், படுக்கையைச் சுருட்டி எடுத்துக் கொண்டு எங்கள் வீட்டு மாடிப்படிகளில் காலைத் தூக்கி வைத்தேன். அவள் என்னைத் தடுத்து நிறுத்தி, "எங்கே போகிறீர்கள்?" என்று கேட்டாள்.

நான் திரும்பி, "ஏன், தெரியவில்லையா? 'எலெக்ட்ரிக் லைட்'டின் வெளிச்சம்தான் பட்டப் பகலைப்போல் கண்ணைப் பறிக்கிறதே!" என்றேன்.

"தெரியாமல் என்ன! 'படுக்கவா போகிறீர்கள்?' என்றுதான் கேட்டேன்."

"ஆமாம்!"

"திறந்த வெளியிலா?"

"ஆமாம்!"

"கொட்டும் பனியிலா?'

"ஆமாம்!"

"ஏன், உள்ளே படுப்பதற்கு என்ன குறைச்சலாம்?"

"நீ இருக்கிறாய்! உன்னுடைய அருமையான குழந்தைகள் இருக்கின்றன! வேறு என்ன வேண்டும்?"

"ஒரு சாண் கயிறுதான் வேண்டும்!"

"ஒரு சாண் என்ன, ஒரு முழம் வேண்டுமானாலும் தருகிறேன்!"

"என்னை ஏன் இப்படி எடுத்ததற்கெல்லாம் கரிக்கிறீர்கள்? உங்களுக்கு என்னைப் பிடிக்கவில்லை என்றால் சொல்லி விடுங்களேன்?"

"பிடிக்கவில்லை என்றால் உடனே பிறந்தகத்துக்குப் போய் விடுவாய்; அவ்வளவு தானே?—பேஷாய்ப் போ! இப்பொழுதே

வேண்டுமானாலும் போ!" என்று சொல்லி விட்டு நான் மாடிக்குச் சென்றேன்.

கீழே யிருந்து விம்மல் சத்தம் வந்தது!

அதைப் பொருட்படுத்தாமல் நான் படுக்கையை விரித்துப் படுத்தேன்.

விம்மல் சத்தம் தொடர்ந்தது!

சிறிது நேரமாவது நிம்மதியாக இருந்து விட்டு வரலாம் என்று எண்ணி மாடிக்கு வந்த எனக்கு, இது என்ன சோதனை? இந்தச் சோதனைக்கு யார் காரணம்?

நான்தான் காரணம் என்றால், அந்தக் காரணத்துக்கு நான் ஏன் ஆளானேன்?

இல்லை, அவள்தான் காரணம் என்றால், அந்தக் காரணத்துக்கு அவள் ஏன் ஆளானாள்?

ஒருவரைப் பற்றி ஒருவர் தெரிந்து கொள்ளாததால் வந்த வம்பு மட்டும் அல்ல இது; என்னைப் பற்றி நானும் அவளைப் பற்றி அவளும் தெரிந்து கொள்ளாததால் வந்த வம்புத்தான் இது!

அப்படித் தெரிந்து கொள்ளாத குற்றம் யாருடையது? எங்களுடையதா?—இல்லை, இல்லவே இல்லை!

ஏனெனில், விரிந்து பரந்து கிடக்கும் இந்த உலகத்தில் நாங்கள் மட்டும் எங்களைப் பற்றி எங்களுக்கே தெரியாமலும், ஒருவரைப் பற்றி ஒருவர் தெரிந்து கொள்ளாமலும் வாழ்க்கை நடத்தவில்லை. வீட்டுக்கு வீடு, வீதிக்கு வீதி, ஊருக்கு ஊர் எங்களைப் போல் விசித்திர வாழ்க்கை நடத்துபவர்கள் இருக்கத்தான் இருக்கிறார்கள்!

இன்று தெரியும் இந்த உண்மைக்கும், அன்று தெரிந்த அந்த உண்மைக்கும்தான் எவ்வளவு வித்தியாசம்!

★

"காதலினால் வாழ்க்கையில் சாதிக்க முடியாத காரியங்கள் ஒன்றுமே யில்லை!" என்று கவிஞர்கள் கதைக்கிறார்கள். அவர்களுக்கு எங்களுடைய ஆழ்ந்த அனுதாபத்தை முதலில் தெரிவித்துக் கொள்கிறோம். ஏனெனில், நாங்கள் 'பெரியோர்கள் நிச்சயித்தபடி' கல்யாணம் செய்து கொண்டவர்களல்ல; 'நாங்கள் நிச்சயித்தபடி' கல்யாணம் செய்து கொண்டவர்கள்தான்!

அதாவது, எங்கள் கல்யாணம் காதல் கல்யாணம்!

குடும்ப நண்பர்கள் என்ற முறையில், கல்யாணத்துக்கு முன்னால் நான் அடிக்கடி அவளுடைய வீட்டுக்குப் போய் வருவதுண்டு; அவளும் என்னுடைய வீட்டுக்கு அடிக்கடி வந்து போவதுண்டு.

கல்யாணமான பிறகு அன்றுதான் இருவரும் முதன் முதலாகச் சந்திப்பதென்று முடிவாயிற்று.

அந்த நாள் நெருங்க நெருங்க, அந்த நேரம் நெருங்க நெருங்க, எனக்கு உண்டான உள்ளக் கிளர்ச்சியைத்தான் என்னவென்பேன்! உயிரும் உடலும் ஒன்றி உண்டான உணர்ச்சியைத்தான் என்னவென்பேன்!

கடைசி கடைசியாக அந்த நாளும் வந்தது; அந்த நேரமும் வந்தது. இருவரும் பெரியோருக்குத் தெரிந்து, பெற்றோருக்குத் தெரிந்து, உற்றாருக்குத் தெரிந்து, ஊராருக்குத் தெரிந்து, எங்களுக்கென்று அலங்கரிக்கப் பட்டிருந்த அந்தத் தனி அறைக்குள்ளே பிரவேசித்தோம்.

மலர் மணம் எங்களை மணமுவந்து வரவேற்றது!

பன்னீரும் சந்தனமும் பல்வேறு பழ வகைகளும் எதிர்த்தாற்போலிருந்த கண்ணாடியில் தெரிந்த காட்சி கண் கொள்ளாக் காட்சியா யிருந்தது!

ஆதாரத்துடன் உள்ளே நுழைந்த எங்கள் இருவருடைய கண்களிலும் ஆசைக் கனல் பறந்தது!

ஆனால்......

பெருகி வந்த உணர்ச்சிக்கு எங்கள் இருவருக்கும் இடையே யிருந்த நாணம் தடை விதித்தது. அந்தத் தடையை மீறுவதற்கு — அப்பப்பா! நாங்கள் செய்த பிரயத்தனங்கள் எத்தனை எத்தனையோ!

நான் அவளைப் பார்க்காதபோது அவள் என்னைப் பார்த்தாள்; அவள் என்னைப் பார்க்காதபோது நான் அவளைப் பார்த்தேன்.

அவளுக்குத் தெரியாமல் என் இதழ்கள் சற்றே விரிந்தன; எனக்குத் தெரியாமல் அவள் இதழ்கள் சற்றே மலர்ந்தன.

ஆனால், இருவருக்கும் வாய்தான் அடைத்துப் போயிருந்தது!

இந்த நிலைமை வெகு நேரம் நீடிக்கவில்லை. நான் துணிந்து அவளை நேருக்கு நேராகப் பார்த்தேன்; அவளும் துணிந்து என்னை நேருக்கு நேரா



கப் பார்த்தாள். அவள் 'சட்'டென்று தலை குனிந்தாள்; நானும் 'சட்'டென்று தலை குனிந்தேன். அவள் முகம் சிவந்தது; என் முகமும் சிவந்தது. என்னுடைய கண்கள் 'படபட' வென்று அடித்துக் கொண்டன; அவளுடைய கண்களும் 'படபட' வென்று அடித்துக் கொண்டன.

ஆம், அவை பேசின; பேசத்தான் செய்தன!

எல்லோருக்கும் தெரிந்த பாஷையிலா? இல்லை இல்லை; எவருக்கும் தெரியாத பாஷையில்!—இரைந்தா? இல்லை இல்லை; இரகசியமாக!

இந்தக் கோலத்துக்கு மத்தியில் எங்களுக்கிடையே யிருந்த நாணம் கொஞ்சம் கொஞ்சமாக நழுவ ஆரம்பித்திருக்க வேண்டும். இல்லையென்றால், நான் ஏன் அவளை இப்போது விழுங்கி விடுபவன்போல் பார்க்கிறேன்? அவள் ஏன் என்னை இப்போது விழுங்கி விடுபவள்போல் பார்க்கிறாள்?

இருவரும் ஒருவர்மீது ஒருவர் வைத்த விழிகளை வாங்கவே யில்லை; பார்த்தோம், பார்த்தோம், பார்த்தோம், பார்த்துக் கொண்டே யிருந்தோம்.

நேரம் போய்க்கொண்டே யிருந்தது!—ஆம், நேரம் போய்க்கொண்டே யிருந்தது!

இத்தனைக்கும் அவள் ஏற்கெனவே எனக்குத் தெரிந்தவள்; நானும் அவளுக்கு ஏற்கெனவே தெரிந்தவன்!

ஆனால், பேசத்தான் நா எழவில்லை!

“இருவருக்கும் இடையே ஏதாவது ஒன்று தூதாக வந்து சேர்ந்தால் எவ்வளவு நன்றாயிருக்கும்?” என்று நினைத்தேன்.

நினைத்ததுதான் தாமதம்; சாளரத்தின் வழியாக எங்கிருந்தோ ஒரு பூனை வந்து எட்டிப்பார்த்தது. உடனே அந்தப் பூனையை நான் துணைக்கு அழைத்தேன்!



“மியாவ், மியாவ்!”

அவள் 'களுக்' கென்று சிரித்தாள்; நானும் 'களுக்'கென்று சிரித்தேன்.

பூனை இறங்கி வந்தது!

நான் மேஜை மீதிருந்த பாலை எடுத்துத் தரையில் கொஞ்சம் கொட்டி நிறுத்தினேன்.

பூனை சுவாரஸ்யமாக அந்தப் பாலை நக்கிக் குடித்தது.

“தனியாக வந்திருக்கிறீரே, தம்பதி சமேதராக வந்திருக்கக் கூடாதோ!” என்றேன் நான், பூனையைப் பார்த்து. பதிலுக்கு அது “மியாவ், மியாவ்!” என்றது.

நான் அதைத் தடவிக் கொடுத்துக் கொண்டே, இன்னும் கொஞ்சம் பாலைக் கீழே கொட்டினேன்.

அவ்வளவுதான்; அந்த மெல்லியலாள் பொறுமை யிழந்தாள். ஓடோடியும் வந்து என் கையிலிருந்த பால் செம்பை 'வெடுக்' கென்று பிடுங்கி, மேஜைமீது 'நக்'கென்று வைத்தாள்.

பூனை எடுத்தது, ஓட்டம்!

நான் அவளுடைய மலர்க் கரத்தைப் பற்றி மதிமுகத்தை நோக்கினேன்!

எங்களுடைய கரங்கள் இணைந்தன!

இணைந்தவை இணைந்தவைதான்; வெகு நேரம் வரை அவை பிரியவே யில்லை!

பிரியாமலே பேச்சு ஆரம்பமாயிற்று!

மணி பத்து, பதினொன்று, பன்னிரண்டு!—ஊஹூம்; பேச்சு ஓயவே யில்லை!—பேசினோம், பேசினோம், பேசினோம், பேசிக்கொண்டே யிருந்தோம்!

“இனி நாம் இருவரும் உடலும் உயிரும் போல!” என்றேன் நான்.

“இனி நாம் இருவரும் மலரும் மணமும்போல!” என்றாள் அவள்.

“இனி நாம் இருவரும் நகமும் சதையும் போல!” என்றேன் நான்.

“இனி நாம் இருவரும் நிலவும் ஒளியும் போல!” என்றாள் அவள்!

நேரம் போய்க்கொண்டே யிருந்தது!—ஆம், பொழுதும் விடிந்து கொண்டே தான் இருந்தது!

இதை உணர்ந்தோ என்னமோ, அவள் எழுந்து சென்று தன்னுடைய தளிர்க் கரங்களில் பால் செம்பை ஏந்திக்கொண்டு வந்து எனக்கு எதிரே நின்றாள்.

நான் அவளை ஏற இறங்கப் பார்த்து விட்டு, “அமிர்த கலசம் ஏந்தி நிற்கும் அப்ஸர ஸ்திரீபோலவே இருக்கிறாயே!” என்றேன்.

அவள் தலையைக் கீழே கவிழ்த்துக் கொண்டு, “அந்த அமிர்தத்தைப் பருகப்

போகும் தேவ புருஷன்போலவே இருக்கிறீர்களே!" என்றாள்.

நான் அவளுடைய தலையை நிமிர்த்தி விட்டுச் சிரித்தேன்—ஆமாம், அப்பொழுது தான் நாங்கள் இருவரும் முதல் முறையாக மனம் விட்டுச் சிரித்தோம்.

அவள் மெள்ள நடந்து சென்று, மெள்ள விளக்கின் திரியை இறக்கிவிட்டு வந்தாள்.

வெளிச்சம் சற்றே மறைந்தது; எங்களைப் பிடித்திருந்த வெட்கமும் சற்றே மறைந்தது — இருவரும் ஒருவரை யொருவர் நெருங்கினோம்......

"மற்றவர்களைப்போல் நாம் ஒருவரை யொருவர் முன் பின் தெரியாமல் கல்யாணம் செய்துகொள்ளவில்லை!" என்றாள் அவள் பெருமிதத்துடன்.

"ஆம், நாம் இருவரும் ஒருவரை யொருவர் முன் பின் தெரிந்தே கல்யாணம் செய்து கொண்டிருக்கிறோம்!" என்றேன் நானும் பெருமிதத்துடன்.

அன்று தெரிந்த அந்த லட்சணம் இன்று.........?



★

பொழுது விடிந்ததும் படுக்கையைச் சுருட்டி எடுத்துக் கொண்டு மாடியை விட்டு இறங்கிக் கீழே வந்தேன். அவள் பெட்டி, படுக்கையுடன் வந்து எனக்கு எதிரே நின்றாள்.

"என்ன, எங்கே பிரயாணம்?" என்றேன்.

"ஊருக்கு!" என்றாள்.

"எப்பொழுது?"

"இப்பொழுதுதான்!"

"பின் ஏன் நிற்கிறாய்?—போகிறதுதானே?"

"உங்கள் உத்தரவை எதிர்பார்த்துத் தான் நிற்கிறேன்."

"என்னுடைய உத்தரவு என்ன தெரியுமா?—நீ ஊருக்குப் போகக் கூடாது என்பதுதான்!"

"என்னுடைய இஷ்டம் என்ன தெரியுமா?—நான் ஊருக்குப் போக வேண்டும் என்பதுதான்!"

"உன்னுடைய இஷ்டப்படி நடப்பதற்கு இது இடமில்லை!"

"அதற்குத்தான் என் பிறந்தகத்துக்குப் போகிறேன்!"

"போகக் கூடாது!"

"என்னை ஏன் வீணாகத் தடுக்கிறீர்கள்?"

"நீ மட்டும் நேற்றிரவு மாடிக்குப் போன என்னை ஏன் வீணாகத் தடுத்தாய்?"

"பனியில் நனைந்தால் உடம்புக்கு ஆகாதே என்றுதான் தடுத்தேன்!"

"நானும் நீ ஊருக்குப் போனால் எனக்குப் பொழுதே போகாதே என்றுதான் தடுக்கிறேன்!"

அவள் சிரித்தாள்; நானும் சிரித்தேன்.

"இது ஏன் உங்களுக்கு முன்னமே தெரியவில்லை?" என்றாள் அவள்.

"அது ஏன் உனக்கு முன்னமே தெரியவில்லை?" என்றேன் நான்.

"நல்ல வேடிக்கை!" என்று சொல்லி விட்டு, அவள் பெட்டியையும் படுக்கையையும் தூக்கிக் கொண்டுபோய்ப் பழையபடி உள்ளே வைத்தாள்.

"நல்ல வாழ்க்கை!" என்று சொல்லி விட்டு, நான் அங்கிருந்த ஒரு புத்தகத்தைத் தற்செயலாகப் புரட்டினேன்.

அந்தப் புத்தகத்திலிருந்த ஒரு வரி என் கவனத்தைக் கவர்ந்தது. அந்த வரி இதுதான்:

"வாழ்க்கை ஒரு புதிர்!"

இந்த வரியை அவளுக்குக் காட்ட வேண்டுமென்று தோன்றிற்று; அழைத்துக் காட்டினேன். அதைப் பார்த்துவிட்டு அவள் சொன்னாள்:

"வாழ்க்கை என்ன, மனித வர்க்கத்தின் குணாதிசயமே ஒரு புரியாத புதிர்தான்!"




# மிகவும் ருசிகரமானது மாத்திரமல்ல- இது நல்லது

**புஷ்டியளிக்கும் பதார்த்தங்கள் நிறைந்தது!**

போர்ன் - விடாவில் 95 சதவிகிதம் எலும்பு வளர்ச்சிக்கும் ஜீவசக்தி யளிப்பதற்குமான சரக்குகள் இருக்கின்றன. தவிர அது ருசியாகவும் ஜீர்ணத்துக்கு தூண்டுகோலாகவும், ஆளியில் ரத்தத்துடன் சேர்ந்து புஷ்டி தருவதாகவும் இருப்பதால் குறிப்பாக கர்ப்பிணிகளுக்கும் வியாதிக்குப்பின் குணமடையும் தருவாயிலும் இன்றியமையாத உணவாக விளங்குகின்றது.

## காட்பரீஸ்

# போர்ன்-வீடா

கால்ஷியம் விடமின்கள் நிறைந்தது

காட்பரி என்பது சிறந்த ரகத்துக்குக் அறிகுறி



# பூமாலைகள்

இரத்தின ஆரத்திற்குப் பதிலாக கழுத்தில் புதிய மலர்ந்த பூமாலை யணியுங்கள். கொஞ்சம் புஷ்பங்கள் சூட்டி, கூந்தலையும் சொகுசாகச் சிங்காரித்துக் கொள்ளுங்கள். இப்பொழுது உங்களைப் பார்க்க எவ்வளவு வசீகரமாயிருக்கும், தெரியுமா! அதே போலிருக்கும் உங்கள் கூந்தலும், டாம்கோ கூந்தல் தேங்கா யெண்ணெயும் ஷாம்பூவும் வழக்கமாக உபயோகப்படுத்தால்.

டாம்கோ கூந்தல் தேங்கா
யெண்ணெயும் ஷாம்பூவும்

தி டாடா ஆயில் மில்ஸ் கம்பெனி லிட்.



# பாம்பாட்டி

பி. எஸ். மணி

விசித்திர வீரியன் என்னும் பெயர் கொண்ட ஓர் அரசன், மணிபுரி என்னும் நாட்டை ஆண்டு வந்தான். அவனுக்குக் கேளிக்கைகளில் பிரியம் அதிகம். அதற்காகவே அவன் பல கோமாளிகளை ஆதரித்து வந்தான். வருஷா வருஷம் பல போட்டிப் பந்தயங்களை ஏற்படுத்தி, அதில் வெற்றி பெறுபவர்களுக்குச் சுமக்க முடியாத அளவு பொன்னையும் அவன் பரிசளித்து வந்தான்.

எல்லாக் கேளிக்கைகளையும் விட அரசனுக்குப் பாம்பாட்டமே மிகவும் பிடித்திருந்தது. அதற்கேற்றாற் போல் மணிபுரியிலேயே கைதேர்ந்த பாம்பாட்டி ஒருவன் இருந்தான். அவன் பெயர் பரமன். அவன் பல ஜாதிப் பாம்புகளைப் பழக்கிப் புது வழிகளில் ஆடச் செய்வான். இதனால் ஒவ்வொரு வருஷமும் அவனே போட்டியில் வெற்றி பெற்று வந்தான். பிரதி வருஷமும் சுமக்க முடியாத அளவு பொன் கிடைத்தால் பரமன் பெரிய பணக்காரனாவதற்குக் கேட்பானேன்!

பரமனுக்குப் பணம் பெருகப் பெருகக் கர்வமும் தலைக்கேறி வந்தது. அதனால் அவன் ஏழைகளாயிருந்த பல பாம்பாட்டிகளை அலட்சியம் செய்து வந்தான்!

அவ்வாறு அலட்சியப் படுத்தப்பட்டவர்களில் பரமன் வீட்டிற்குக் கொஞ்ச தூரத்திலிருந்த வீரனும் ஒருவன். அவன் மிகவும் ஏழை. வீரனும் கெட்டிக்காரப் பாம்பாட்டிதான். ஆனால் அதிர்ஷ்டம் தான் அவனுக்கு வெகு தூரத்தில் இருந்தது!



ஒரு நாள் காலை பரமன் ஒரு காரணமுமின்றி வீரனின் வீட்டருகே வந்து நின்றான். வீரனுக்கு ஆச்சரியம் தாங்க முடியவில்லை. "எங்கே வந்தீர்கள்?" என்று பணிவுடன் கேட்டான்.

"என்ன, வீரா! இந்த வருஷமும் நீ போட்டியில் கலந்து கொள்ளப் போகிறாயா? ஏன் வருஷா வருஷம் வீணாகச் சிரமப் படுகிறாய்?" என்று ஏகத்தாளத்துடன் கேட்டான் பரமன்.

வீரன் பயந்துகொண்டே, "நான் என்ன செய்வேன்? என்னைப் பிடித்திருக்கும் வறுமை என்னை விடமாட்டேன் என்கிறதே! அதனால் இந்த வருஷமும் போட்டியில் கலந்து கொள்ளலாமென்றுதான் இருக்கிறேன். ஏதோ ஒரு முறையாவது அந்தப் பரிசு எனக்குக் கிடைத்தால், அதைக் கொண்டு நான் என்னுடைய வறுமையைப் போக்கிக் கொள்ளலாமல்லவா?" என்றான்.

"உனக்கா பரிசு கிடைக்கப் போகிறது?—ஹஹ்ஹ ஹஹ்ஹா! யாருக்குப் பரிசு கிடைக்கும் என்பதுதான் எல்லோருக்கும் தெரிந்த விஷயமாச்சே! ஏன் வீணாகக் கனவு காண்கிறாய்?" என்று அலட்சியமாகச் சொல்லிவிட்டுச் சென்றான் பரமன்.

வருஷா வருஷம் நடக்கும் பாம்பாட்டிப் போட்டியை அந்த வருஷமும் விசித்திர வீரியன் ஏற்படுத்தினான். பரமன் பிரமாதமாக அலங்கரித்துக் கொண்டு படாடோபத்துடன் போட்டிக்கு வந்தான். வீரன் அடக்க ஒடுக்கத்துடன் வந்து ஓர் ஓரத்தில் நின்று கொண்டிருந்தான்.

போட்டி ஆரம்பமானதும் ஒருவர் பின் ஒருவராகத் தங்களது திறமையைக் காட்ட ஆரம்பித்தனர். ஆயினும் வழக்கம்போல் பரமனுக்குத்தான் வெற்றி கிடைத்தது. அரசன் பரமனுடைய திறமையை மெச்சி அந்த வருஷமும் அவனுக்கே பொன் முடிப்பை எடுத்து அளித்தான்.

பரிசைப் பெற்ற பிறகு பரமன் பேசா

மல் போயிருக்கக் கூடாதா? அதுதான் இல்லை. அவன் அங்கிருந்தவர்களை நோக்கி, "என் பாம்புகளைத் தான் நான் ஆட வைப்பேன் என்று நீங்கள் நினைக்கிறீர்களா? என்னுடைய மந்திர ஜால வித்தைகளினால் வேறு எந்தப் பாம்பையும் நான் ஆட்டச் செய்வேன். எங்கே, இங்கே கூடியுள்ளவர்களில் யாராவது எந்தப் பாம்பையாவது நான் ஆட வைக்க வேண்டுமென்று சொல்லட்டும்—அப்படியே ஆட வைக்கிறேனா, இல்லையா என்று பாருங்கள்! அப்படி ஆட வைக்கா விட்டால் நான் இந்தப் பொன் முடிப்பை அந்தப் பாம்புக்குரியவனிடம் கொடுத்துவிடத் தயார்!" என்று வீரம் பேசினான்.

இதைக் கேட்டதும் கொஞ்ச நேரம் எல்லோரும் மலைத்து நின்றனர். சிறிது நேரம் கழித்து ஒரு சிறுவன் வந்து பரமனுக்கு முன்னால் நின்றான். அந்தச் சிறுவனைக் கண்டதும், "என்ன, உன் பையிலுள்ள பாம்பை ஆடவைக்க வேண்டுமா?" என்று அதட்டிக் கேட்டான் பரமன்.

"ஆமாம்!"

"எங்கே, அந்தப் பாம்பை வெளியில் எடு, பார்க்கலாம்!"

சிறுவன் மெதுவாகத் தன் பையிலிருந்த பாம்பை எடுத்து வெளியில் எறிந்தான். பரமன் தன் மந்திர ஜால வித்தைகளினால் அந்தப் பாம்பை ஆட வைக்க எப்படி எப்படி யெல்லாமோ முயற்சி செய்தான். அவன் திறமை ஒன்றும் அதனிடம் செல்லவில்லை. அந்தப் பாம்பு அவனுடைய ஆடலையும் பாடலையும் பொருட்படுத்தாமல் அப்படியே ஆடாமல், அசையாமல் கிடந்தது. பரமன் ஆச்சரியத்துடன் அந்தப் பாம்பைக் கையில் எடுத்தான். அவ்வளவுதான்; "என்ன அநியாயம்! இதுவும் ஒரு பாம்பா?" என்று கோபத்தோடு கேட்டான்.

"ஆமாம்; அதுவும் ஒரு பாம்புதான்!" என்றான் சிறுவன்.

"இது ரப்பர் பாம்பல்லவா?"

"நீதான் எந்தப் பாம்பையும் ஆட வைப்பேன் என்று கூறினாயே?" என்றான் சிறுவன்.

அரசன் பார்த்தான்; சிறுவனின் கேள்வி அவனுக்கு நியாயமாகப் பட்டது. உடனே, "ஆமாம், அவன் சொல்லுவது சரி! நீ சொன்னபடி பண முடிப்பை அவனிடம் கொடுத்து விடு!" என்று கட்டளையிட்டான்.

பரமன் முகத்தில் அசடு வழிந்தது. அவன் தன் தோல்வியை ஒப்புக்கொண்டு சிறுவனிடம் பொன் முடிப்பைக் கொடுத்து விட்டான். இந்தச் சம்பவத்துக்குப் பிறகு, வீரனை மட்டுமல்ல; வேறு யாரையுமே பரமன் அலட்சியப் படுத்துவதில்லை.

---



## மகாத்மாவின் பக்தர்

மண்ணைப் பொன்னாக்கி, பாலைவனத்தைச் சோலைவனமாக்கி, மக்களுக்கு உணவு அளிப்பதையே குலத் தொழிலாகக் கொண்ட கொங்கு வேளாளப் பிரமுகர் ஸ்ரீ வி. சி. வெள்ளியங்கிரிக் கவுண்டர் காந்தி மகாத்மாவினிடம் அத்தியந்த பக்தி கொண்டவர். 1921-ம் ஆண்டிலேயே பிரிட்டிஷ் சர்க்கார் அவரைக் கைது செய்ய நினைத்துப் பிறகு பல பிரமுகர்களின் யோசனையின் பேரில் அந்த எண்ணத்தைக் கைவிட்டார்கள். அன்று முதல் நேற்று வரையில் ஸ்ரீ கவுண்டர் காந்தி பக்தராய் விளங்கி கதர் உடுத்தி காங்கிரஸ் நிர்மாணத் திட்டங்களை நிறைவேற்றப் பேருதவி புரிந்து வந்தார். கோயமுத்தூர் ஜில்லாவில் பொதுமக்களிடையே இணையற்ற செல்வாக்குப் பெற்றிருந்தார். "ஒழுக்கத்தில் சிறந்த உத்தமர்" என்றும், "தர்மப் பிரபு" என்றும் புகழ் பெற்றார். ஸ்ரீ வெள்ளியங்கிரிக் கவுண்டர் சில நாளைக்கு முன்பு மோட்டார் விபத்தில் காலமானபோது கோயமுத்தூர் ஜில்லாவில் ஆயிரமாயிரம் மக்கள் கண்ணீர் சிந்திக் கதறினார்கள். ஸ்ரீ வெள்ளியங்கிரிக் கவுண்டரின் அஸ்தி, காவேரி கடலுடன் சங்கமம் ஆகும் காவேரிப்பட்டினம் என்னும் புனித க்ஷேத்திரத்தில் கடலில் கரைக்கப்பட்டது. மறு உலகில் மகாத்மா காந்தியின் ஆவி சென்றுள்ள இடத்துக்கு ஸ்ரீ கவுண்டரின் ஆவியும் சென்றடைந்திருக்கும் என்று நம்புகிறோம்.

---

# எனது நண்பர்

**பி. ஸி. பலராமன்**

நான் புதிய உத்தியோகத்துக்கு உயர்த்தப்பட்டதாக அன்று இரவு பத்து மணிக்குத் தந்தி வந்தது. அதற்குக் காரணம் எனது நண்பர் என்பது எனக்குத் தெரியும். எனவே தந்தியை வாங்கி வைத்துக்கொண்டு, நண்பரைப் பார்த்து நன்றியைத் தெரிவிக்க அவரைத் தேடினேன். என்ன தேடியும் நண்பர் கண்ணுக்கு அகப்படவில்லை.

மணி பன்னிரண்டு ஆகிவிட்டபடியால், காலையில்தான் ஆசாமியைக் கண்டு பிடிக்க முடியுமென்று வீட்டிற்குப் போய்ப் படுக்கையில் படுத்தேன்.

"இதென்ன, கூத்தாக இருக்கிறது! ஒரு மனிதன் பன்னிரண்டு மணிக்கு வீட்டுக்குப் போவதாம்; வீட்டில் ஒரு ரகளையும் இல்லாமல் போனதும் படுத்துக் கொள்ளுவதாம்! லக்ஷணந்தான்! அவள் ஒன்றும் சொல்லாமல் எப்படி இருந்திருப்பாள்? ஒருவேளை வீட்டுக்கார அம்மாள் ஊமையோ, அல்லது கதை எழுதுகிற பேர்வழி புதுசாக இருப்பதால், அகலக் கால் வைத்துக் கதையைக் கொண்டு போகிறாரோ!" என்று நேயர்கள் நினைப்பது எனக்குத் தெரிகிறது. அந்த வயிற்றெரிச்சலைக் கொட்டுவானேன் என்றுதான் நான் அதைப் பற்றிக் குறிப்பிடவில்லை. ஏன் தெரியுமா? — நான் கட்டைப் பிரமச்சாரி ஐயா, கட்டைப் பிரமச்சாரி!

வீட்டில் நானும் என் சமையற்காரன் சங்கரனும்தான். சங்கரனைப் பற்றி அதிகமாக நான் ஒன்றும்சொல்லப் போவதில்லை. கும்பகர்ணன் அவனிடம் நித்திரைப் பிச்சை வாங்க வேண்டும். நளன் அவன் சமையலை ஒருவேளை சாப்பிட்டிருந்தால் கட்டாயம் தூக்குப் போட்டுக் கொண்டிருப்பான். உடல் தத்துவ ஆராய்ச்சி நிபுணர் ஒருவர் அவன் செய்கைகளை ஒரு மணி நேரம் கவனித்தால், அவர் கட்டாயம் 'நோபல்' பரிசு வாங்கி விடுவார். அதாவது, மூளையே இல்லாமல் மனிதன் உயிரோடு இருக்கலாம் என்ற உண்மையைக் கண்டு பிடித்து விடுவார் என்கிறேன்!



அன்று அவனைக் கூப்பிட்டு, "அடேய்! நாளைக் காலை எட்டரை மணிக்கு என்னை எழுப்பிவிடு!" என்று சொல்லிவிட்டுப் படுத்தேன்.

படுத்திருக்கும்போது என் நண்பருடைய அருமையைப் பற்றி எண்ணிக் கொண்டிருந்தேன். 'ஆகா! ரொம்ப நல்லமாதிரி அவர்! திடீரென்று நம்மைத் தூக்கி மேல் பதவியில் போட்டு விட்டாரே! நாம் இந்த உதவிக்கு என்ன கைம்மாறு செய்வது?' என்று சிந்தனையில் ஆழ்ந்திருந்தேன். சிறிது நேரம் இப்படியே இருந்துவிட்டு, அப்புறம் தூங்கியும் போனேன்.

மறுநாள் காலை எழுந்ததும், "அடேய் சங்கரா! எங்கேடா ஒழிந்து போய் விட்டாய்? உன்னை எத்தனை மணிக்கு நான் எழுப்பச் சொன்னேன்?" என்று அவன்மேல் எரிந்துவிழுந்தேன்.

"எட்டரை மணிக்கு, ஸார்!" என்று சொல்லிக்கொண்டே அவன் என் அறைக்கு வந்தான்.

"யு ஸ்டுபிட்! பிறகு ஏனடா எழுப்பவில்லை? மணி பத்துக்குமேல் இருக்கும் போல் இருக்கே!" என்றேன்.

"மணி ஏழுதான், ஸார்! நீங்க இன்னும் ஒண்ணரை மணி நேரம் 'ரெஸ்ட்' எடுத்துக்கலாம், ஸார்!" என்றான் சாவதானமாக.

எனக்கு ஆத்திரம் பொங்கி வந்தது. இழுத்து மூடிக்கொண்டிருந்த போர்வையை எடுத்து அவன் முகத்தில் எறிந்து விட்டு, "ரெஸ்ட் என்னடா, ரெஸ்ட்? நீ இருக்கும் லக்ஷணத்தில் உனக்கு இங்கிலீஷ் வேறு கேடா!" என்று சொல்லிக் கொண்டே எழுந்து சென்று, பக்கத்து அறையில் இருந்த கடிகாரத்

# சீக்கிரம் போக...!




நிற்பவர்:—என்ன ஸார், இது! மாம்பலம் போகிறதாகச் சொல்லிவிட்டு ரொம்ப நாழியா இந்தப் பஸ் ஸ்டாண்டிலே காத்துக் கொண்டிருக்கிறீர்களே?

உட்கார்ந்திருப்பவர்:— ஆமாம், சீக்கிரமாப் போய்விடலாம்னு 'எக்ஸ்பிரஸ் பஸ்'ஸுக்காகக் காத்துக்கொண்டிருக்கிறேன்!

---

தைப் பார்த்தேன். என்ன அதிசயம்! மணி ஏழுதான்; கண்ணைத் துடைத்துக் கொண்டு மறுபடியும் பார்த்தேன். மணி ஏழே ஏழுதான்! ஆனால் கடிகாரம் ஓடாமல் நின்று போயிருந்தது.

எனக்கு அப்போது வந்த ஆத்திரமும், இந்தியா சுதந்திரம் அடைந்தபோது சர்ச்சில் துரைக்கு வந்த ஆத்திரமும் ஒன்று என்று நிச்சயமாகச் சொல்லலாம். "உனக்கு எத்தனை தடவை சொல்லி அழுகிறதுடா? வாரா வாரம் கடிகாரத்துக்குத் தவறாமல் சாவி கொடு, சாவி கொடு என்று! நேற்று என்ன கிழமை? வெள்ளிக்கிழமைதானே? சாவி கொடுப்பதற்கு என்ன கேடு!" என்று பின்னால் நின்று கொண்டிருந்த சங்கரனைத் திரும்பிப் பார்த்தேன்; காணோம்.

என்ன அகம்பாவம்! "நேற்று வியாழக்கிழமை, ஸார்! இன்றைக்குத்தான் வெள்ளிக்கிழமை! இதோ, சாவி கொடுக்கப் போகிறேன், ஸார்!" என்று சொல்லிக் கொண்டே, சமையலறையிலிருந்து அவன் வெளியே வந்தான்.

எனக்குக் கோபம் தாங்கவில்லை; இன்னொரு தடவை பழையபடி கத்தலாம், என்று தொண்டையைச் சரிப்படுத்திக் கொண்டு திட்ட ஆரம்பித்தேன். அந்தச் சமயத்தில் 'எனது நண்பர்' எதிர்பாராத விதமாக என் வீட்டுக்குள் நுழைந்தார்!

இந்த 'நான்ஸென்ஸ் சங்கர'னை எனது நண்பருடைய சிபாரிசின் பேரில்தான் நான் வேலைக்கு வைத்துக் கொண்டேன். ஆகையால் அவரிடம் என் ஆத்திரத்தைக் கொட்டலாம் என்று திரும்பினேன். ஆனால் என் உத்தியோகம் உயர்ந்ததற்குக் காரணமாயிருந்தவர் அவராகையால் மலர்ந்த முகத்துடன் அவரை வரவேற்றேன்.

எனது நண்பர் யார் என்று உங்களுக்குச் சொல்லவில்லையே! அவர் வேறு யாரும் இல்லை; அசல் ராஜபாளையம் நாய்தான்!

ஆம், ஒரு வருஷத்துக்கு முன்னால் ராஜபாளையம் ராஜா ஒருவர் எனக்கு ஒரு பெண் நாய் தந்தார். ராஜா என்றால் சுதேச மன்னர் என்று எண்ணிவிடாதீர்கள். "எல்லாரும் இந்நாட்டு மன்னர்!" என்ற பாரதியாரின் திருவாக்கின்படி அங்கே இருப்பவர்களில் பெரும்பாலோர் பெயரளவில் ராஜாக்கள்தான். அந்த ராஜாக்களில் ஒருவர் கொடுத்த நாய்தான் அது. ஒரு நாள் அந்த நாய் தெருவில் போய்க் கொண்டிருந்த ஒரு பையனைக் கடித்துவிட்டது. அவனுடைய பெற்றோர்கள் காயத்தோடு அந்தப் பையனைக் கூட்டிக்கொண்டு வந்து, நஷ்ட ஈடு வழக்குத் தொடரப் போவதாகப் பயமுறுத்தினார்கள். வேறு வழி இல்லாமல் அந்தப் பையனை வேலைக்கு வைத்துக் கொண்டேன். அவன்தான் சங்கரன். இது எனது நண்பருடைய சிபார்சுதானே!

அதே நாயின்—அதாவது, எனது நண்பரின் குட்டியை—என் ஆபீஸ் மானேஜருக்குக் கொடுத்தேன். நன்றியுள்ள பிராணியின் சகவாசம் ஏற்பட்டதால் நன்றி பிறந்து, அவர் எனக்கு மேல் உத்தியோகம் கொடுத்துவிட்டார்!

இப்பொழுது நீங்களே சொல்லுங்கள்—ராஜபாளையம் நாயை 'எனது நண்பர்' என்று நான் பெருமையுடன் சொல்லிக் கொள்வதில் ஏதாவது குற்றம் உண்டா?

---

சென்ற 28—11—48 கல்கி இதழில் வெளியான "அவன் பாக்யசாலி" என்னும் போட்டிக் கதையை எழுதியவர் ஸ்ரீமதி எஸ். எஸ். காமா என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

# வளரும் தமிழ்

## அம்புலி மாமா

தமிழ்நாட்டுக் குழந்தைகளுக்கு "அம்புலி மாமா" சில காலமாகச் செய்துவரும் அரிய சேவையைப் பார்த்துப் பார்த்து அனுபவித்து மகிழ்ந்து வருகிறோம். மேனாடுகளில் குழந்தைகளுக்கென்று எத்தனையோ பத்திரிகைகள் வெளியாகின்றன. அவை எவ்வளவோ விதவிதமான சித்திர அற்புதங்களும் கற்பனைச் சித்திரங்களும் நிறைந்து விளங்குகின்றன. அத்தகைய குழந்தைகளுக்குரிய பத்திரிகை நல்ல முறையில் தமிழில் எப்போது வெளியாகப் போகிறதென்று நெடுங்காலமாக எதிர்பார்த்துக் கொண்டிருந்தோம். "அம்புலி மாமா" என்னும் மாதப் பத்திரிகை நம்முடைய மனோரதத்தை நிறைவேற்றி வைத்திருக்கிறது. மேலே மூவர்ணச் சித்திரமும் உள்ளே விதவிதமான வர்ணப் படங்களும் பாடல்களும் கதைகளுமாக "அம்புலி மாமா" குழந்தைகளின் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் முறையில் அமைந்து வெளியாகி வருகிறது. "அம்புலி மாமா" என்றென்றைக்கும் சுக்லபட்சத்து அம்புலி மாமாவாக விளங்கி, பூரண சந்திரனாக வளர்ந்து, தமிழ்நாட்டுக் குழந்தைகளின் இதய வானத்தில் வெள்ளி நிலவு வீசி விளங்கப் பெற்றிருக்கும் என்று நம்புகிறோம். தனிப் பிரதி விலை அணா 6 வருஷ சந்தா: ரூ. 5. விலாசம்: "அம்புலி மாமா" ஆபீஸ், தபால் பெட்டி நெ. 1686, சென்னை 1.

## சத்யாக்கிரகம்

காந்திஜியின் பெயர் உள்ள வரை உலகத்தில் நிலைத்து நிற்கக்கூடிய வார்த்தை அவர் சிருஷ்டித்த சத்தியாக்கிரகம். அதை உலகத்துக்கு வெறும் வார்த்தையாக மட்டும் காந்திஜி அளிக்கவில்லை; அதிலுள்ள மகத்தான கிரியா சக்தியையும் உலகத்துக்கு நிரூபித்துக் காட்டினார். அந்தச் சக்தியால் அடிமை வாழ்வில் மூழ்கிக் கிடக்கும் ஒரு பெருந் தேசத்தைத் தட்டி எழுப்பி விடுதலை யடையச் செய்யலாம் என்பதையும் அவர் நிரூபித்துக் காட்டினார்.

காந்திஜி தம்முடைய வாழ்க்கையில் பல்வேறு சந்தர்ப்பங்களில் சத்தியாக்கிரக ஆயுதத்தை உபயோகித்து வெற்றி யடைந்திருக்கிறார். அந்த சத்தியாக்கிரகத்தின் தன்மையைப் பற்றியும் கையாள வேண்டிய முறைகளைப் பற்றியும் பல்வேறு சந்தர்ப்பங்களில் கூறியிருக்கிறார். அதையெல்லாம் திரட்டி எளிய தமிழில் அறிஞர் திருகூட சுந்தரம் பிள்ளை வழங்கியிருக்கிறார். புஸ்தகத்தில் உள்ள மூன்று அநுபந்தங்களில் முதல் அநுபந்தத்தில் வள்ளுவர் முதல் இன்று வரையுள்ள மற்ற பெரியோர்கள் சத்யாக்கிரகத்தைப் பற்றிக் கூறியிருக்கும் மணி மொழிகளைக் கொடுத்திருக்கிறார். விலை ரூ. 1-12-0. விலாசம்: கமர்ஷியல் பிரிண்டிங் அண்டு பப்ளிஷிங் ஹவுஸ், 46, அரண்மனைக்காரத் தெரு, சென்னை 1.



சமீபத்தில் கவர்னர் ஜெனரல் ராஜாஜி கல்கத்தாவுக்குச் சென்றிருந்தபோது, கல்கத்தா பாரதித் தமிழ்ச் சங்கத்துக்கும் விஜயம்செய்தார். சங்கத் தலைவர் ஸ்ரீ டி. என். சேநாபதி ராஜாஜியை வரவேற்றுப் பேசுகிறார்.

# கம்பர் தரும் காட்சி

**டி.கே.சி.**

## 234. உயர்ந்துவிட்டது பெண்குலம்!

சீதா தேவியைக் கண்டு கொண்டோமே என்ற எக்களிப்பில் அனுமன் ராமனிடம் என்ன வெல்லாமோ சொல்லுகிறான். அதனால் தனக்குக் கிடைத்த பாக்கியத்தையும் பெருமையையும் பற்றி ஆவேசத்தோடு பேசுகிறான். தன்னைப் பற்றிக்கூட பேச முடிந்தது. ஆனால் சீதையைப் பற்றிப் பேச மறந்து விட்டான் என்றுகூடச் சொல்லத் தோன்றும். இனி வருகிறது சீதையைப் பற்றிய பேச்சு!

“ராமனே! இலங்கைக்குப் போனேன். சீதாபிராட்டியையா கண்டேன், அல்ல!”

‘விற்பெருந் தடந்தோள்வீ ர!
வீங்குநீர் இலங்கைவெற் பில்
நற்பெருந் தவத்தளா ய
நங்கையைக் கண்டேன் அல்லேன்;—
இற்பிறப்(பு) என்பதொன் றும்,
இரும்பொறை என்பதொன் றும்,
கற்பெனும் பெயரதொன் றும்
களிநடம் புரியக்கண் டேன்!’

[விற்பெரும் தடந்தோள் வீர: வில்லேந்திய அபூர்வமான பெரிய தோள் கொண்ட வீரனே, ராமனே; வீங்கு நீர் இலங்கை வெற்பில்: அலைமோதும் சமுத்திரத்திடையே உள்ள இலங்கைத் தீவின் மலைப் பிரதேசத்தில்; நற்பெரும் தவத்தளாய நங்கையை: உயர்ந்த தூய தவஞ் செய்பவளான பெண்ணொருத்தியை; கண்டேன் அல்லேன்: கண்டேன் என்று சொல்ல முடியாது:—ஆனால் என்னத்தைக் கண்டேன்—இற்பிறப்பு என்பதொன்றும்: உயர்ந்த குடிப் பிறப்பு என்னும் தத்துவமும்; இரும்பொறை என்பதொன்றும்: வலிய பொருளை அடைவதற்காகக் காத்திருக்கும் பொறுமை என்னும் அரிய தத்துவமும்; கற்பு எனும் பெயரது ஒன்றும்: ஏதோ கற்பு கற்பு என்று ஒரு வார்த்தையைச் சொல்லிக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் அவர்களுக்கு அது எத்தகைய பெருமை, சக்தி எல்லாம் வாய்ந்தது என்பது தெரியாது. நான்தான் அதை யெல்லாம் நேரில் கண்டு தெரிந்து வந்திருக்கிறேன். பெண் இதயத்தில் ஒரு அரிய தத்துவம் இருக்கிறது. அது நாடுவ தெல்லாம் நாயகனுடைய நலம், புகழ் இவைகளையே. அதற்காக எந்த பயங்கரமான விபத்தையும் எதிர்த்து நிற்கவும், உயிரைத் துறப்பது எளிதா யிருந்தாலும் அப்படித் துறந்து விடாமல் உயிரை வைத்திருக்கவும், செய்ய வல்லது அது. அத்தகைய அபூர்வ திடசித்தம் வாய்ந்த கற்பென்னும் அந்தத் தத்துவமும். களிநடம் புரியக் கண்டேன்: அந்த மூன்று தத்துவங்களும் எக்களிப்போடு கூத்தாடின என்று சொல்ல வேண்டும்.

குறிப்பு:—ஒரு உருவத்தின் சக்தியையும் அழகையும் அசையாத நிலையில் வைத்துப் பார்க்கும்போது தெரியவா செய்யும்! தெரியாது. கோலாகலமாய் உறுப்புக்கள் எல்லாம் ஒன்று சேர்ந்து தாண்டவம் ஆடும் போது தான் சக்தியும் அழகும் தெளிவாய்ப் புலனாகின்றன. அப்படித் தெளிவாகப் புலப்பட்டன குடிப் பிறப்பு, பொறுமை, கற்பு என்ற மூன்று தத்துவங்களும்.]

உலகத்தில் நெடுகிலும் ஆடவரை மேல் என்றும், பெண்டிரைத் தாழ்ந்தவர் என்றும் கருதி வந்திருக்கிறார்கள். அப்படியே நடத்தியும் வந்திருக்கிறார்கள். வீர தீரமான மனசு ஆடவருக்கு உரியதென்றும், பெண்டிருக்கு உரியதல்லவென்றும் புறவாரியாகப் பார்த்தும் பேசியும் வந்திருக்கிறார்கள்.

ஆனால் உள்ளத்தின் அடிப்படையான தத்துவத்தைப் பார்க்கும்போது பெண்டிருடைய திடசித்தம் ஆடவருக்கு இல்லை என்றே சொல்லத் தோன்றும்.

சீதையின் நிலையை வெகு தெளிவாய் மனசிற் பதிய வைத்துக் கொள்ளுகிறார் கவிஞர். அதைவிடப் பரிதாபமான நிலை ஒன்று உண்டென்று எண்ண வேண்டியதில்லைதானே. இந்தச் சோக நிலையானது அவளது அதி அற்புதமான உறுதியில் நிற்கிறது.

நாயகன் வருகையாகிய லக்ஷியத்தை நோக்கியே நிற்கிறாள். உயிரை விடுதல் எளிதுதான். அது செய்யவில்லை அவள். லக்ஷியத்திற்காகத் தத்தளிக்கும் உயிரை நிலைக்க வைத்துப் பாது

காக்கிறாள். அப்படியானால் பெண்மை என்ற தத்துவத்தை என்ன என்று சொல்லுகிறது!

சோகத்தாள் ஆயநங் கை
 கற்பினாற், — தொழுதற்கொத் த
பாகத்தார் தேவிமா ரும்
 வான்சிறப் புற்றார்; மற் றைப்
பாகத்தாள் இப்போ தீ சன்
 மகுடத்தாள்; பதுமத்தா ளும்
ஆகத்தான் அல்லன், மா யன்
 ஆயிரம் மௌலிமே லாள்.

[சோகத்தாள் ஆய நங்கை கற்பினால்: சோகத்தில் மூழ்கியிருக்கும் சீதையின் உறுதியான நிலையைக் கண்ட பிறகு: தொழுதற்கு ஒத்த பாகத்தார் தேவிமாரும்: வழிபடுவதற்கு உரிய தேவர்களது (பிரமன், இந்திரன், சூரியன் முதலியோரது) மனைவிமாரும்; வான் சிறப்பு உற்றார்: உயர்ந்த நிலையை அடைந்து விட்டார்கள் என்று சொல்லத் தோன்றுகிறது: மற்றை: மேலும்; பாகத்தாள்: இடது பாகத்திலுள்ள பார்வதி தேவி: இப்போது ஈசன் மகுடத்தாள்: இப்போது சிவபெருமானது தலைமேல் வந்திருக்கிறாள்; பதுமத்தாளும் ஆகத்தாள் அல்லள்: லக்ஷ்மி தேவியும் திருமாலின் மார்பில் இல்லை: ஆயிரம் மௌலி மேலாள்: திருமாலின் ஆயிரக் கணக்கான முடிகளுக்கும் மேலாய் ஒரே வியாபகமாய் வீற்றிருக்கிறாள்.]

சீதையின் மன உறுதியையும் தீரத்தையும் பார்த்த பிறகு இப்படியெல்லாம் சொல்லத் தோன்றுகிறது அனுமனுக்கு. உள்ளத்திலிருந்த உவகை அப்படியெல்லாம் குதித்தோடி வருகிறது.

இந்த உண்மைகளைக் கேட்டுப் பருகுகிறான் ராமன். அவனது உள்ளம் ஆனந்தப் பெருக்குக்கு நிலையமாகிறது.

சீதை இலங்கையில் இருக்கிறாள். மீட்க வேண்டியது அடுத்த வேலை.



திருவல்லிக்கேணி தேசியப் பெண் பாடசாலையின் உதவிக்காக ராஜாஜி மண்டபத்தில் 5-12-48ல் ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மியின் இன்னிசைக் கச்சேரி நடந்தது. மண்டபம் கொள்ளாமல் ரஸிகர்கள் கூடியிருந்தார்கள். பாடசாலைக்கு ரூ 40,000 கிடைத்தது. கச்சேரிக்குத் தலைமை வகித்த சென்னைக் கவர்னர், பவநகர் மகாராஜா பேசுகிறார். அவருக்கு வலது புறத்தில் பவநகர் மகாராணியும் தேசியப் பாடசாலைத் தலைமை ஆசிரியையும் அமர்ந்திருக்கிறார்கள்.




அன்று அம்மி மிதித்து, அருந்ததி பார்த்து என் கணவரின் கைத்தலம் பற்றிய சுபதினத்தில் நான்தான் இவ்வுலகிலேயே பெரும் பாக்கியசாலி என்று கருதினேன். ஏன்? பிறகு அவருடன் புது வாழ்வு வாழ ஆரம்பித்த பின்னும் நான் இன்பத்தில்தான் திளைத்துக் கொண்டிருந்தேன். எங்களது கடந்த வாழ்க்கையில் எனக்கும் என் கணவருக்கும் இடையே மன வேற்றுமை என்று எதுவும் இதுவரை ஏற்பட்டதில்லை; பிணக்கும், பிரியமின்மையும் எங்களை அண்டியதில்லை; கோபமும், கொடூரமும் எங்களிடைத் தோன்றியதில்லை! இவ்வித மாசற்ற வாழ்க்கையை நாங்கள் இருவரும் நடத்தினோம்.

எல்லாம் இன்று நடந்தது போலிருக்கிறது. அன்றொரு நாள் சொன்னார் அவர்: ''விமலா! 'அன்பு, அன்பு' என்று உன்னிடம் வாஞ்சை காட்டினால் மட்டும் போதுமா? உனக்கும் மற்ற பெண்களைப்போல நகை, நட்டுகள் போட்டுக்கொள்ள வேண்டுமென்ற ஆசை ஒன்றும் இருக்காதா? ஆனால் எனக்கு என்னவோ இந்த போர்டு பாடசாலை சங்கீத உபாத்தியாயர் உத்தியோகத்தில் கிடைக்கும் சம்பளம் நமது வயிற்றை அன்றாடம் கழுவத்தான் சரியாக இருக்கிறது. எனவே, வேறு எங்கேயாவது தினமும் ஓரிரண்டு சங்கீத 'டியூஷன்' எடுத்துக் கொண்டாவது கொஞ்சம் பணம் சேர்த்து உனக்கு ஒரு வைரமாலை வாங்கிப் போடணும் என்று எனக்கு ஆசை......''

''போதும், உங்கள் யோசனை! 'டியூஷன்' என்று வைத்துக்கொண்டு அதிகம் உடம்பைச் சிரமப்படுத்திக் கொள்ளாதீர்கள். எனக்கு நகையும் வேண்டாம்; நட்டும் வேண்டாம்'' என்று நான் சொல்லிவிட்டேன்.

இந்த சம்பாஷணை முடிந்து இப்போது ஒரு வருஷத்திற்கு மேலாகி விட்டது. நான் என்னவோ அவருடைய அன்பு ஒன்றே போதுமென்று இருந்தேனேயொழிய வேறு ஒன்றுக்கும் வீண் ஆசைப் படவில்லை!

அப்படியிருக்க, எனக்கே உரிய அவரது உள்ளன்பை மற்றொருத்தி அபகரிக்க முயன்றால் என் பெண் உள்ளம் எப்படிப் பொறுக்கும்? எல்லாம் இந்தப் புது வீட்டுக்கு வந்தபின்தான் நடந்தது. ஆம்; சென்ற ஒருமாத காலத்தில்.

இந்தப் புது வீட்டுக்குக் குடி வந்த மறுநாள் நான் என் கணவரது அறைக்குள் நுழைந்தேன். நான் பின்னால் வந்ததைக் கூடக் கவனிக்காமல் அவர் அசைவற்று ஜன்னல் வழியாக எங்கேயோ வெளிப் பக்கம் பார்த்துக் கொண்டிருந்தார். நானும் என்ன அதிசயம் அங்கிருக்கிறதென்று எட்டிப் பார்த்தேன்.

மறு கணம் என் தலை சுழன்றது. என் இதயம் துடிக்கக்கூட மறந்து ஒரு நிமிஷம் நின்றுவிட்டது. எதிர் வீட்டு மாடி ஜன்னலில் ஒரு இளம் பெண் நின்று கொண்டு கண் கொட்டாமல் இவரையே பார்த்துக் கொண்டிருந்தாள்.

ஒரு நிமிஷம் அவளை உற்று நோக்கினேன். செக்கச் செவேலென்று துவளும் கொடி போன்றிருந்த அவளுக்கு வயது இருபதுதானிருக்கும். காதிலும், மூக்கிலும் 'டால்' அடிக்கும் வைர நகைகள் அவள் 'பசை' நிரம்பிய குடும்பத்தைச்

சேர்ந்தவள் என்பதை எடுத்துக் காட்டின. இவ்விதம் அவளையே நானும் பார்த்துக் கொண்டிருப்பதைக் கவனித்த என் கணவர், "விமலா! அந்தப் பெண்ணைப் பார்த்தாயா? பத்தரை மாற்றுத் தங்கப் பிரதிமையைப் போல் அல்லவா இருக்கிறாள்?" என்று கூறிவிட்டுப் பெருமூச்செறிந்தார்.

"ஓஹோ......! அவ்வளவு தூரம் உங்கள் ரசிகத் தன்மை போய்விட்டதா? அதிருக்கட்டும், அவள் யார்?" என்று பதட்டத்துடன் கேட்டேன் நான்.

"விமலா! அவள் யாரோ? அதை மட்டும் என்னைக் கேட்காதே!" என்று பதிலளித்தார் அவர்.

இவை யாவும் என் பெண் உள்ளத்திலெழுந்த பொறாமைக் கனலுக்கு எண்ணெய் வார்த்தது போலாகி விட்டன. அதற்குப் பிறகு நானும் அவளைப் பற்றி என் கணவரிடம் ஒன்றும் கேட்பதில்லை. அவரும் எதுவும் தெரிவிப்பதில்லை.

ஆனால் அவர் தமது அறையில் உட்கார்ந்திருக்கும் போதெல்லாம் அந்த எதிர் வீட்டுச் சுந்தரி மட்டும் ஜன்னலண்டை வந்து பழி கிடக்கத் தவறுவதில்லை! இச் சம்பவங்கள் யாவும் என் பெண்ணுள்ளத்தைக் கலக்கி என் இன்ப வாழ்வுக்கே ஒரு முற்றுப் புள்ளி வைத்து விட்டது போன்ற பிரமையை உண்டாக்கி விட்டன. எனினும் மனம் புழுங்குவதைத் தவிர வேறு வழி என்ன?

## 2

இவ்விதம் அமுதவண்ணம் சிந்தித்துக் கொண்டிருந்த நான் மெல்ல எழுந்து ஜன்னல் வழியாக எட்டிப் பார்த்தேன். அப்போதுதான் மற்றொரு விபரீத சம்பவமும் நடந்து எனது ஒடிந்த உள்ளத்தைப் பின்னும் உலுக்கி விட்டது.

ஆம்; வெளியே சென்றுவிட்டுத் திரும்பிய என் கணவர் நேராக எங்கள் வீட்டுக்குள் நுழையாமல் எதிர்வீட்டுக்குள் புகுந்தார். அவர் உள்ளே சென்றவுடனேயே எதிர் ஜன்னலண்டை உட்கார்ந்திருந்த அப் பெண்ணும் உள்ளே போய் விட்டாள்.

என் கண்ணால் கண்ட இந்த விபரீத சம்பவத்தைப் பற்றி நினைத்தபோது என் மனம் ரொம்பவும் பொருமிற்று. என் வாழ்வைப் பாழ்படுத்த முயலும் அப் பழிகாரியின் தலையில் வானமே இடிந்து விழாதா? எந்த தெய்வத்திற்கும் கண்ணில்லையா என்று எண்ணினேன்.

சற்று நேரத்திற்கெல்லாம் அவளுடைய வீட்டுக்குச் சென்றிருந்த என் கணவர் வீடு திரும்பினார். நான் அவருடன் பேசவேயில்லை.

"விமலா! சீக்கிரம் சாதம் போடு. நான் மறுபடியும் வெளியே போக வேண்டும்......" என்றார் அவர்.

நான் மௌனமாக ஒரு வார்த்தை கூடப் பேசாமல் யந்திரம்போல் வேலைகளைச் செய்துவிட்டு அவருக்கு உணவு பரிமாறினேன். சாப்பிட்ட பின் சற்று நேரம் சிரமபரிகாரம் கூடச் செய்து கொள்ளாமல் அவர் வெளியே போய்விட்டார்.

அதற்கு மேல் என்னால் சகித்துக் கொண்டிருக்க முடியவில்லை. கொண்ட கணவரது அன்பை மற்றொருத்திக்குப் பறிகொடுத்த பின் இவ்வுலகில் உயிர் வாழ்ந்துதான் என்ன பயன்? எதற்கும் அப் பழிகாரியை நேரிலேயே கண்டு ஆத்திரம் தீர, "என் வாழ்க்கையை நீ அழித்து கெடுக்கின்றாயே? இது உனக்கு அடுக்குமா?" என்று கேட்டு விடலாமாவென்று நினைத்தேன்.

உடனே கிளம்பி, கால் பதற அவளது வீட்டுக்குள் நுழைந்தேன். அப்போது ஜன்னலண்டை ஒரு நாற்காலியில் உட்கார்ந்திருந்த அவள், "அம்மா! யாரோ வருகிறாப்போலிருக்கிறது; காலடிச் சத்தம் கேட்கிறது" என்று சொன்னாள். அவளுக்கு என்னைப் பார்த்துப் பேசக்கூட இஷ்டமில்லைபோலிருக்கிறது; ராங்கிக்காரி என்று நினைத்தேன்.

அதற்குள் அவளது தாயார் உள்ளேயிருந்து வந்து, "வா அம்மா; யார் நீ?" என்று வினவினாள்.

"என் பெயர் விமலா. எதிர் வீட்டுப் பாட்டு வாத்தியாரின் மனைவி" என்றேன்.

"என்ன......? பாட்டு வாத்தியாரின் மனைவியா? என்னருகே வாருங்கள். உங்களைப் பார்க்கக்கூட முடியாத பாவி நான்..." என்று அப்பெண் நாற்காலியில் அமர்ந்தபடியே விசும்பினாள். எனக்கு ஒன்றும் புரியவில்லை. விஷயம் தெரியாமல் திகைத்து நின்றேன்.

அதற்குள், "விமலா! இவள்தான் என் மகள் கலோசனா. பெரியம்மை கண்டு இரு கண்களின் ஒளியையும் இழந்து விட்டாள். அதோடு அவள் கால்களும் கொஞ்ச நாளாக மடக்க நீட்ட முடியாமல் போய் விட்டன. ஜன்னலண்டைச் சாய்வு நாற்காலியில் அமர்ந்து கிடக்கிறாள் நாள் முழுவதும்..." என்று துக்கம் கலந்த குரலில் விளக்கிக் கூறினாள் அவள் தாயார்.

"ஐயோ, பாவம்!" என்றேன் என்னை அறியாமலேயே.

அதற்குள் அந்த அம்மாள் மேலும் தொடர்ந்து, "காசு பணம் நிறைய

எங்களுக்கு இருக்கிறது. ஆனால் என்ன பிரயோஜனம்? கொஞ்ச நாளாக உன் கணவர்தான் அவளுக்குப் பாட்டுச் சொல்லிக் கொடுக்கிறார். அவள் பாடிக்கொண்டாவது கொஞ்ச நாழிகை சந்தோஷமாயிருப்பதே எங்களுக்கு ஆனந்தத்தைக் கொடுக்கிறது'' என்றான்.

உடனே, ''ஆமாம்; என் கணவர் நேற்றுத்தான் உங்கள் பெண் சுலோசனாவைப் பற்றிக் கூறினார். உடனே மனம் கேளாமல் அவளைப் பார்க்க ஓடோடியும் வந்தேன்'' என்று மனமறிந்து ஒரு முழுப் பொய்யைக் கூறிவிட்டுச் சுலோசனாவின் அருகில் சென்றேன். பேதைப் பெண் என்னை அப்படியே இறுகக் கட்டிக் கொண்டு விட்டாள்.

சிறிது நேரத்திலேயே எனக்கு உற்ற தோழியாகிவிட்ட சுலோசனாவை விட்டுப் பிரிய மனமின்றிப் பிரிந்து என் வீடு திரும்பினேன். நான் வந்த சற்று நேரத்திற்கெல்லாம் என் கணவரும் வீட்டுக்கு வந்தார். நானும் கலகலப்பாகக் குதூகலத்துடன் அவரை வரவேற்றேன்.

''விமலா! இதோ பார், உனக்கு ஒரு பரிசு'' என்றவாறு என் கையில் ஒரு பெட்டியைக் கொடுத்தார்.

அதை வாங்கி ஆவலுடன் அவசர அவசரமாகப் பிரித்தேன். என்ன ஆச்சரியம்! அதில் ஒரு வைரமாலை!

''வைர மாலையா? ஏது பணம்?'' என்றேன் திகைப்புடன்.

''விமலா! நான் ஒரு வருஷமாக ஒரு பெண்ணுக்குப் பாட்டு சொல்லிக் கொடுக்கிறேன். அவள் எனக்குக் கொடுத்த ஒரு வருஷ சன்மானத்தில்தான் இதை உனக்கென்று வாங்கினேன். திடீரென்று உனக்கு இப்பரிசைக் கொடுத்து உன்னை மகிழ்விக்க வேண்டுமென்றுதான் இது வரை நான் இதைப் பற்றிச் சொல்லவில்லை'' என்றார் அவர்.

''எனக்குத் தெரியும், உங்களது அந்த சிஷ்யை யாரென்று! அவள்தான் என் பிரிய தங்கை சுலோசனா!'' என்று சொல்லிச் சிரித்தேன் நான்.

''ஓஹோ......! உங்களது உறவு அவ்வளவு தூரம் முற்றிவிட்டதா? நல்ல வேலை......'' என்றார் அவர்.

அதற்குள் அவரது கையிலிருந்த வைர மாலை என் கழுத்தில் ஏறிற்று.

என் மனதிலிருந்த சஞ்சலம் மறைந்து, சாந்தி நிலவியது!



காங்கிரஸ் மகாசபை கூடும் ஜெய்ப்பூரில் உள்ள புகழ் பெற்ற கண்ணாடி மகால்

# வட்ட மேஜை

## ✱ ரயில்வே விஷயம்!

நமது மத்திய சர்க்காரின் உதவி மந்திரி ஸ்ரீ க. சந்தானத்தைப் பற்றிய தங்கள் கட்டுரையை எல்லோரும், முக்கியமாக என் போன்ற ரயில்வே இலாகாவில் பணியாற்றுபவர்களும் வெகுவாக ரஸித்திருப்பார்கள்.

பதவியேற்ற உடனேயே ஏதோ வைத்ததை எடுப்பதுபோலப் பல அரிய காரியங்களை மின்னல் வேகத்தில் ஆரம்பித்திருக்கிறார் ஸ்ரீ க. சந்தானம். ஏனெனில் ரயில்வே இலாகாவில் ஊறிக்கிடக்கும் ஊழல்களைத் தெளிவாகக் கண்டவர் அவர். முன்பெல்லாம் சட்டசபையில் அடிக்கடி ரயில்வேயைப் பற்றிய கேள்விகளையே அதிகமாக எழுப்பிப் பழைய ஆங்கில ஆட்சிகாலத்துப் 'பொம்மை' மந்திரிகளையும், அவரது சகாக்களையும் திணற அடித்தவர் அவர்.

மேற்படி இலாகாவில் கருத்துள்ள அவரைப் பிடித்து உதவி ரயில்வே மந்திரியாக்கிய நமது சர்க்காரை நாம் பாராட்டுவோம். ஸ்ரீ சந்தானமும் தாங்கள் எழுதியிருந்தபடி ரயில்வே இலாகாவை மற்றெந்த இந்தியத் தொழில் ஸ்தாபனத்தையும் விட முன்னுக்குக் கொண்டு வருவார் என்பதில் ஐயமில்லை.

ஆனால் அவருடைய செயல்களுக்கு ரயில்வேத் தொழிலாளர்களின் ஒத்துழைப்பு மிக அவசியம். தற்போது இந்திய ரயில்வேத் தொழிலாளர்கள் இடையே 'சர்க்கார் தொழிலாளிகளின் நன்மையை நன்கு கவனிக்கவில்லை' என்ற ஒரு உணர்வு இருப்பதாகத் தெரிகிறது.

ரயில்வேத் தொழிலாளர்களிடையே இப்போது இருக்கும் இந்த 'முணு முணுப்பு'க்கு முக்கிய காரணம், வருகிற ஜூலை மாதம் முதல் தேதியிலிருந்து ரயில்வே உணவுப் பொருள் கடைகளில் அவசியமான ரேஷன் சாமான்களை மட்டும் தொழிலாளருக்குக் குறைந்த விலையில் கொடுப்பதென்றும், அதை ஒப்புக் கொள்ளாதவர்களுக்கு அதிக விகிதத்தில் பஞ்சப்படி கொடுப்பதென்றும் சர்க்கார் செய்துள்ள முடிவுதான் என்று தெரிகிறது.

ஸ்ரீ சந்தானம் இந்த முடிவிற்கு வந்ததற்குக் காரணமில்லாமலில்லை. ரயில்வே உணவுப் பொருள் கடைகளைப் பற்றிய விஷயங்களை விசாரிக்க நியமிக்கப்பட்ட கமிட்டியில் ஸ்ரீ சந்தானம் பங்கெடுத்துக் கொண்டவர். அவ் விசாரணையின்போது அவ்விலாகாவிலிருந்த தடுக்க முடியாத ஊழல்களையும் தொழிலாளர்கள் கடைகளில் மலிவாகச் சாமான்களை வாங்கி அதிக விலைக்கு விற்ற 'கருப்பு மார்க்கெட்' கதைகளையும் கண்டு கேட்டார். மற்றும் ஆயிரக்கணக்கில் பொய்ப் பெயர்களில் ரேஷன்கார்டுகள் உலாவி வந்த விஷயத்தையும், அதன் மூலம் நமது ரயில்வேயின் செல்வம் கோடிக் கணக்கில் விரயமாவதையும் கண்டு வருந்தினார்.

உணவுப் பொருள்களைக் குறைந்த விலைக்குத் தொழிலாளர்களுக்குக் கொடுக்க வேண்டியது அவசியந்தான். ஆனால் 'சுண்டைக்காய் கால்பணம், சுமை கூலி முக்கால் பணம்' என்ற முறையில் அதைப் பங்கீடு செய்வது முட்டாள் தனமல்லவா!

இதையெல்லாம் ரயில்வேத் தொழிலாளர்கள் உணர வேண்டும். மற்றும் அவர்களுக்கு எவ்வளவோ சிறு குறைகள் இருக்கலாம். அதை அவர்கள் எடுத்துக் கூறலாம். ஆனால் அதை யோசித்து முடிவு கூறும் சர்க்கார் நமது தேசபத்தில் கருத்துள்ளவர்கள் என்பதை மறக்கக் கூடாது.

பம்பாய்
3—12—48 எஸ். விஜயராகவன், டி.காம்.

○●○

## ✱ 'சென்னைச் செய்தி'

எங்கள் காந்தியப் பதிப்பகத்தின் வெளியீடான 'தமிழன் கண்ட மதம்' என்னும் புத்தகத்தை மதிப்புரைக்கென 'சென்னைச் செய்தி'க்கும் 8-8-48 அன்று அனுப்பி வைத்தோம். 21-9-48 அன்று நண்பரொருவர் 15-9-48 சென்னைச் செய்தி இதழைக் கொண்டு வந்து, ''இதில் நீங்கள் எழுதியிருக்கும் புத்தகத்திற்கு மதிப்புரை வந்திருக்கிறது. பாருங்கள்!'' என்றார். மதிப்புரை நன்றாகவே இருந்தது. ஆனால், இரண்டு நாட்கள் சென்று சென்னை அரசாங்க விளம்பர இலாகாவிலிருந்து கிடைக்கப்பெற்ற கடிதம் தான் வியப்பை உண்டு பண்ணியது. 20-9-48 அன்று எழுதி 22-9-48 தபாலில் சேர்க்கப்பட்ட அக் கடிதத்தில், ''சென்னைச் செய்தியில் மதிப்புரைக்கென 8-8-48 அன்று அனுப்பிய புத்தகம் கிடைக்கப்பெற்றோம். விரைவில் மதிப்புரை செய்து, மதிப்புரை வெளிவரும் அவ்விதழையும் தங்கட்கு அனுப்பிவைக்கின்றோம்'' என்று எழுதியிருந்தது. இதைப் பார்த்த எங்களுக்கு ஒரே சிரிப்புத் தான். ஏனெனில், 15-9-48 இதழிலேயே மதிப்புரை வெளியாகி நாமும் பார்த்தாகி விட்டது! இதன் மூலம் சென்னைச் செய்தியின் தபால் பகுதிக்கும், அதை அச்சிட்டு அனுப்பும் ஆசிரியர் காரியாலயத்திற்கும் யாதொரு சம்பந்தமில்லையென்றே தோன்றுகிறது.

அடுத்தபடியாக மாதம் இருமுறை 1ம், 15ம் வெளிவர வேண்டிய இப் பத்திரிகை தப்பித் தவறி ஒரு முறையாவது குறிப்பிட்ட தேதியில் வருவதே கிடையாது. இப்படி ஒரு தனிப்பட்டவரின் பத்திரிகை வெளிவந்தால் அதன் மதிப்பும், பொருளாதாரமும் என்னவாகும்? அரசாங்கச் சொத்து; அதனால் தானே இவ்விதம் நடக்கின்றது. கூடியவரை தனி உடைமை நீக்கிப் பொது உடைமையைப் பெருக்கி, வளர்க்க வேண்டுமென்ற உணர்ச்சி விரைந்து பரவுகின்ற இந் நாளில் இம்மாதிரி ஊழல்கள் நிறைந்தால் மக்களுக்கு அரசாங்கத்தின்பாலுள்ள மதிப்பும், நம்பிக்கையும் குறைந்துவிடாதா? அமைச்சர்களும் அதிகாரிகளும் இதில் கவனமெடுத்துக்

கொண்டால் சீக்கிரம் செம்மைப்படுத்தி விடலாம். அரசாங்கம் கவனிக்குமா?

பன்னத்தூர்
5—12—48 சுப. அருணாசலம்

○●○

## யாருக்குச் சௌகரியம்?

தஞ்சை ஜில்லாவில் இந்த வருஷம் குறுவை நெல் அறுவடையானவுடன் சர்க்கார் உத்தியோகஸ்தர்களால் அனுமதி பெற்ற வியாபாரிகளைக் கொண்டு ஏழை விவசாயிகளிடமிருந்து 48 படி கொண்ட மூட்டை (ஒன்றரை மணு) ஒன்று சுமார் 9-2-0 விதம் கொள்முதல் செய்தார்கள்.

அத்துடன் 20-11-48க்குள் நெல் அளக்காவிடில் மூட்டை ஒன்றுக்கு எட்டு அணா குறைவு படும் என்று சொல்லி நெல் கொள்முதல் செய்தார்கள்.

பிறகு 21-11-48ம் தேதியிலிருந்து மூட்டை ஒன்றுக்குச் சுமார் ரூ. 2-0-0 அதிகப்படுத்தியிருக்கின்றனர். இந்த அதிக விலையினால் முதலில் சர்க்காருக்கு உதவ வேண்டி நெல் அளந்த விவசாயிகள் சர்க்காரிடம் நம்பிக்கை இழந்திருக்கின்றனர். நெல் பதுக்கி வைத்த புண்யவான்களுக்கும் சர்க்கார் உத்தரவுக்குக் கீழ்ப்படிந்து நெல் அளக்காதவர்களுக்கும் இந்த அதிகவிலை உதவியுள்ளது.

கொண்டசமுத்திரம்
26—11—48 ரா. ஜெகநாதன்

○●○

## கால்நடைகளைக் கவனிப்பார்களா?

தோலுடை தரித்த வைக்கோல் கன்றுகள் சென்னை முதலிய பெரிய நகரங்களின் வீதிகளில் கறவை மாடுகளுடன் செல்லும் கோரக் காட்சி மக்களின் மனதை உருக்குகிறது. என்னே மனிதனது மதியீனம்? இளங் கன்றுகளுக்கு இக்கதியா? இந்நிலை பசுவுமாயின் ஆதாரங்களுக்கே அழிவு தேடுவது திண்ணம். சற்றேறக்குறைய பதினைந்து வருடங்களுக்கு முந்திய கணக்கின்படி முப்பது கோடி கால் நடைகள் இருந்த தேசத்தில் இன்று பதினைந்து கோடியாகக் குறைந்துவிட்டது. மக்களது வாழ்க்கைக்கும் தேச வளத்திற்கும் விவசாயம் இன்றியமையாததென்றால் விவசாய விருத்திக்குக் கால்நடைகள் பெருகலின் அவசியம் புரிகின்றதென்றும் அரசாங்கம். இன்னும் அறியவில்லை போலும். இனியேனும் தீவிர முயற்சி எடுத்து அவைகளைப் பரிபாலிக்கும் வழிகளைக் கவனிக்க மாட்டார்களா?

தொ. ஜெடயபாளையம்
3—12—48 ஜி. அற்புதநாதன்

○●○

## மூன்று சந்தேகங்கள்

நான் தஞ்சை ஜில்லாவின் தென்கிழக்கு மூலையில் உள்ள ஒரு நாட்டுப் புறத்தான். குறுவை நெல் 126 பவுண்டு ரூ. 9-0-0 விதம் அளந்து விட்டோம். இன்னும் பாக்கி இருப்பதை 30-11-48க்குள் அளக்காவிடில் மணுக்கு 0-8-0 குறைவைப் பிடிக்கப்படும் என சர்க்கார் அறிக்கை விட்டிருக்கிறார்கள்.

21-11-48 அன்று மாகாண சர்க்கார் 82 பவுண்டு கொண்ட மணுவுக்கு ஒன்றுக்கு கனத்தடி விலை ரூ. 7-10-0 என்று விலை நிர்ணயித்து அறிக்கை வெளியிட்டிருப்பது விசித்திரமாக இருக்கிறது.

தற்போது ஏற்படும் சந்தேகம் என்ன வென்றால் மணுக்கு ரூ. 6-0-0 விதம் நெல் அநேகமாக விற்பனையாகிவிட்டது. மேசென்னதார் விற்கவேண்டிய விலை ரூ 8-14-0. அத்துடன் ரயில் சத்தம் ரேஷன் கடைக்காரர் லாபம் வேறு இருக்கிறது. ஆனால் உற்பத்தி செய்வோர் பெற்றது 26 மரக்கால் கொண்ட மூட்டைக்கு ரூபாய் ஒன்பதுதான். இடையில் நாலுநாள் தங்க வைத்ததற்காக மேசென்னதார், மில்காரர்கள் அதே சமாளுக்கு ரூபாய் 4-8-0 லாபம் பெறுவர். இதில் இன்னும் அதிசயிக்கத் தக்க விஷயம் யாதெனில் ஒவ்வொரு தடவையும் 24 மரக்கால் நெல்லுடன் உற்பத்தியாளரே சாக்குக் கொடுக்க வேண்டும். இல்லாவிட்டால் சாக்கின் கிரயமாகப் பன்னிரண்டு அணா பிடித்துக்கொள்ளப்படும்.

தயவு செய்து கீழ் குறிப்பிட்ட சந்தேகங்களை சர்க்கார் நிவர்த்தி செய்யுமா?

1. இதுவரை சர்க்கார் ஏஜண்டுகளால் கொள்முதல் செய்யப்பட்ட குறுவை நெல் விலைக்கும், 21-11-48ல் சர்க்கார் அறிக்கைப் படியுள்ள விலைக்கும் மத்தியிலுள்ள தொகை யாரைச் சேரும்?

2. நெல்கொள்முதல் தீவிரமாய் முடிந்த பிறகு குறுவை நெல் விலையை உயர்த்துவதன் நோக்கம் என்ன?

3. வெறும் தேய்மானம் மட்டும் தள்ளுபடி செய்து, சாக்குக் கிரயத்தைக் கொள்முதல் விலையோடு சேர்க்காமல் ஒவ்வொரு 24 மரக்காலுக்கும் ஒரு புதுச் சாக்கு வாங்கு என்கிறார்கள். இந்த வீண் நஷ்டம் உற்பத்தியாளருக்கு ஏன்?

வடமழை
25—11—48 தேவநாதன்



★ ★ வட்டமேஜைப் பரிசுத் தொகை ரூ. 25-ஐ, பம்பாய் எஸ். விஜயராகவனுக்கும் பன்னத்தூர் சுப. அருணாசலத்துக்கும் ரூ. 12—8—0 வீதம் பிரித்து வழங்கப்பட்டது.

# நார் மாம்பழம்

ரா. விழிநாதன்

"இந்தாங்க, சாமி!" என்று சொல்லியவாறே ஐந்தாறு பழங்களை எடுத்து ஒரேயடியாகச் சபேசன் கையில் திணித்தான் மாம்பழக் கூடைக்காரன்.

"இருக்கட்டும், அப்பா! முதலில் விலையைச் சொல்லு" என்றார் சபேசன்.

"கையிலே வாங்கிப் பாருங்க, சாமி! ஒரு விலை இரண்டு விலை சொல்லுவானேன்? ஒரே விலை சொல்லிடறேன். இஷ்டமானால் எடுங்க, இல்லாவிட்டால் விடுங்க. டஜன் மூணரை ரூபாய்க்கு ஒரு தம்பிடிகூடக் குறையாது...... அப்புறம் நீங்கள் கேட்க வேண்டியதுதான்."

"அதிருக்கட்டும். பழம் நார் - நீர் இல்லாமல் கல்லா இருக்குமா?"

"வேணுமானா அரிந்து காட்டறேன்" என்று சொல்லிக் கொண்டே ஒரு பழத்தை எடுத்து அரிந்தான்.

பழத்தை சுவைத்துப் பார்த்த பிறகு, சபேசன், "ஒரே விலை, இஷ்டமிருந்தால் கொடு. இல்லாவிட்டால் எடுத்துக் கொண்டு போ. இரண்டே முக்கால் ரூபாயானால் ஒரு டஜன் கொடு" என்றார்.

"போ சாமி, கிடக்கு! கலெக்டர் ஐயா வீட்டுப் பக்கம் போனேன்னா மூணரை ரூபாயில்லே, நாலு ரூபாய்க்கே கூடையோடு எடுத்துக் கொண்டு விடுவாங்க. என் மாம்பழம்னா அவுங்களுக்கு உயிர். இங்கே இருந்து அவ்வளவு தூரம் போகணுமேன்னு பார்த்தேன்" என்று சொல்லியவாறே கூடையைத் தூக்கினான் பழக்காரன்.

'கலெக்டர்' என்ற சொல்லைக் கேட்டதும் மாம்பழம் கட்டாயம் வாங்கித்தான் ஆக வேண்டும் என்ற சபேசன் முடிவுக்கு வந்தார். பின்னையாண்டானுக்கு வேலை வாங்கிக் கொடுக்க அவரைக் காக்காய்ப் பிடித்தாகவேண்டுமே! என்ன விலையாக இருந்தாலும் வாங்கித் தானே ஆகவேண்டும்?

ஆகவே, பழக்காரனைக் கூப்பிட்டு, "மூன்று ரூபாய் போட்டுக் கொண்டு, ஒரு ஒன்னரை டஜன் கொடு" என்றார்.

"அதெல்லாம் முடியாது, சாமி. நீங்கள் பிரியப்பட்டுக் கேக்கிறீங்களே என்பதற்காகப் போனால் போவுதுன்னு மூணேகால் ரூபாய்க்குத் தரேனுங்க. வேணுமானால் எடுங்க!" என்றான்.

வேறு வழியின்றி மாம்பழத்தை வாங்கிக்கொண்டு, மாம்பழக்காரனுக்குச் சில்லறையைக் கொடுத்து அனுப்பினார் சபேசன்.

மத்தியானம் மூன்று மணி சுமாருக்கு சபேசன் கையில் மாம்பழக் கூடையுடன் கலெக்டர் பங்களாவுக்குள் நுழைந்தார்.

"வாருங்கள் சபேசன்! என்ன, அபூர்வமா யிருக்கிறது! இப்பொழுதெல்லாம் நீங்கள் இந்தப் பக்கம் வருவதே யில்லையே! என்ன காரணம்?" என்று கேட்டவாறே கலெக்டர் கருணாகரன் அன்புடன் வரவேற்றார்.

"வராமல் என்ன? வேலை ரொம்ப அதிகம். இன்றுதான்......" என்று சொல்லிய வண்ணம் மாம்பழங்களை எடுத்து மேஜை மீது வைத்தார் சபேசன்.

"அடே, இதெல்லாம் எதற்கு, சபேசன்?"

"ஒன்றுமில்லை. வருகிறபோது வழியிலே பார்த்தேன். பழம் நன்றாயிருக்கும் போலிருந்தது. ஏதோ வாங்கி வந்தேன். வேறொன்றுமில்லை" என்று பல்லை யிளித்தார் சபேசன்.

பிறகு சிறிது நேரம் பேசிக்கொண்டிருந்து விட்டு, வந்த காரியத்தையும் ஜாடையாகச் சொல்லிவிட்டு விடைபெற்றுக் கொண்டார் சபேசன்.

"ஏண்டா, முனியா! இன்று பழத்தை எங்கே கொண்டுபோய் விற்றாய்?" என்று கேட்டார் கலெக்டர், தம் புதிய தோட்டக்காரனைப் பார்த்து.

"ரோப்பட்டுக் காலனி இருக்குப் பாருங்க, அந்தப் பக்கம் கொண்டுபோய் வித்தேனுங்க. இன்னிக்குக்கூட வந்திருந்தாங்களே, அந்த ஐயாகூட ஒரு டஜனோ ஒன்னரை டஜனோ வாங்கிக் கொண்டாங்க."

"அப்படிச் சொல்லு. இது எதடா இது! நம்ம தோட்டத்துப் புளிச்ச நார்ப் பழம் நம்மகிட்டேயே திரும்பி வந்துவிட்டதே என்று பார்த்தேன். அதன் ரகசியம் இப்பொழுதல்லவா தெரிகிறது! நாளைக்கு அதை எங்கேயாவது கண் காணாத இடத்திலே கொண்டு போய் விற்றுத் தொலை" என்று உத்தரவு கொடுத்து விட்டு, 'விடு விடு' வென்று உள்ளேசென்றார் கலெக்டர்.



"லங்கர்" மார்க்

வாசனை பாக்குத் தூள்




★

அசல்

# பாதாம் எண்ணை

★

# ரோஜாப்பூ

குல்கந்து

★

# ரஸிக்லால் & கோ.,

கோவிந்தப்ப நாயக்கன் தெரு

மதராஸ் - 1

---

# கிரைப் ஸிரப்



கிரைப் ஸிரப் குழந்தைகளுக்கு ஏற்ற சிறந்த பேதி மருந்து. வயிற்றுக் கோளாறென்றால் சந்தேகமின்றி நாள் ஒரு போஸ் கிரைப் ஸிரப் கொடுங்கள்.

ஒரு  தயாரிப்பு

அழுகை

மாறி

புன்னகை

தயாரிப்பவர்கள் :

மைசூர் இண்டஸ்ட்ரியல் அண்டு டெஸ்டிங் லாபரடெரி லிமிடெட்

மல்லேஸ்வரம், பெங்களூர்

விற்பனை ஏஜண்டுகள் :

மெஸர்ஸ். பெஸ்ட் அண்டு கம்பெனி லிமிடெட்

தபால் பெட்டி நெ. 63, மதராஸ்

# யாரும் பிரமிக்கிறார்கள்

"அதைவிட விலை அதிகமல்லவா"

என்கிறார்கள்

உண்மையில் அப்படியில்லை. இது வரை உற்பத்தி செய்யப்பட்ட பெனண்டன் பேனாக்களுள் மதிப்பிற் சிறந்தது புதிய கோல்டன் ப்ளாட்டினம் பேனாதான். என்கிரேவ் செய்த மூடி - பல்வேறு வர்ணக் கவர்ச்சி - இயாதி வாய்ந்த ப்ளாட்டினம் மூள், ஆகியவைகளுடன் கூடிய இந்த கவர்ச்சிகரப் பேனாவை உபயோகித்தால்தான் நம்ப முடியும்.

புதிய

கோல்டன்

ரூ. 5/-

# Platignum

பெனண்டன் பேனா

இங்கிலாந்தில் செய்யப்பட்டது

வர்த்தக விசாரணைகளுக்கு
முழு உரிமை பெற்ற
விநியோகஸ்தர்கள் :

முல்லர் & பிப்ஸ் (இந்தியா) லிமிடெட்
15, கந்துராமசெட்டி தெரு, மதராஸ்

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
116-119, Sladens Garden, Poonamalle High Road, Kilpauk, Madras

மகாமகோபாத்தியாய

## டாக்டர் உ. வே. சாமிநாதையர்

### நூல் நிலைய வெளியீடுகள்

●

1. பரதசேனாபதீயம் ரூ. 1-4-0
(மூலமும் உரையும்)
2. கும்பேசர் குறவஞ்சி நாடகம் 1-8-0
3. குற்றாலக் குறவஞ்சி ரூ. 0-8-0
(கலாக்ஷேத்திர நடிப்பு முறைப்படி)
4. நவநீதப் பாட்டியல் ரூ. 2-0-0
(மூலமும் பழைய உரைகளும் குறிப்புரையுடன்)
5. கம்ப ராமாயணம் ரூ. 1-0-0
(மூலமும் குறிப்புரையும்) பாலகாண்டத்தின் தொடக்கத்திலிருந்து திருவவதாரப் படலம் முடிய, மாதிரிக்காக வெளியிட்ட பகுதி.
6. நூல்நிலைய தமிழ்ச் சுவடிகளின் நாமாவளி ரூ. 0-6-0

**அச்சில் இருப்பவை**

யாப்பருங்கலக் காரிகை ரூ. 3-8-0
(மூலமும், பழைய உரையும்)

கம்ப ராமாயணம் - பாலகாண்டம்

●

கிடைக்குமிடம்:

மகாமகோபாத்தியாய

**டாக்டர் சாமிநாதையர்**

**நூல் நிலையம்**

கலாக்ஷேத்திரம்,

அடையாறு, சென்னை - 20

●

குறிப்பு:— இந் நூல் நிலைய வெளியீடுகளின் விரிவான கேட்லாக் எழுதுவோருக்கு இனாமாக அனுப்பப்படும்.



நேர் வகிடானாலும் சரி, கோணல் வகிடானாலும் சரி, வாரி எடுத்து இளம்பிறை வடிவாகக் கட்டினாலும் சரி—கூந்தலை எவ்விதமாக ஜோடித்தபோதிலும், தலை நிறைந்த கூந்தல் இல்லாமல் இச்சிங்காரக் கட்டுகளெல்லாம் சோபிக்க மாட்டா. ஆகையால் கேசவர்த்தினியைக் கொண்டு கூந்தலையும் கூந்தலழகையும் இப்போதே பெருக்கிக் கொள்ளுங்கள். தலையை வித விதமாய் அலங்கரித்துக் கொள்ளுங்கள்.

அழகு என்பது உடன் பிறந்ததே. ஆனால் கூந்தலழகோ சுபாவமாக அமையாவிடினும், கேசவர்த்தினியால் கிட்டுவதே.

கவனக் குறைவாலோ அல்லது வேறு காரணத்தாலோ இழந்த கூந்தலுக்குப் பதில் இளங் கூந்தலைப் பெறுங்கள். சிறு வயது முதல் கேசவர்த்தினியை உபயோகிப்பதால், கூந்தல் ஆரோக்யத்தையும் அழகையும் தவறாமல் ஒருங்கே அடையுங்கள்.

# கேசவர்த்தினி

கூந்தலைப் பாதுகாப்பது, விருத்தி செய்வது, அழகு படுத்துவது

**விலை அணா 14**

(மேற் செலவு வேறு)

எல்லாக் கடைகளிலும் கிடைக்கும்

தயாரிப்பவர்

**தென் இந்திய ரஸாயனசாலை**

**ஆர். எஸ். புரம் - கோயமுத்தூர்**

லோகல் ஆபீஸ்கள் :

எஸ்பிளனேட், திருவல்லிக்கேணி, மவுண்ட் ரோடு, சாயப்பேட்டை, மயிலாப்பூர், தியாகராயநகர், புரசவாக்கம், எழும்பூர், — ராயபுரம்

●

சென்னை மாகாணத்தில் எல்லா முக்கியமான இடங்களிலும் பம்பாயிலும் பிராஞ்சுகளும் சப் ஆபீஸ்களும் உள்ளன

●

| | |
|---|---|
| வழங்கி வாக்களிக்கப்பட்ட மூலதனம் | ரூ. 72.00,000 |
| செலுத்தப்பட்ட மூலதனம் | ரூ. 53,00,000 |
| ரிசர்வ் நிதி | ரூ. 62,00,000 |

எல்லாவிதமான பாங்க் அலுவல்களும் நடத்தப்படும்

என். கோபால அய்யர், செக்ரடரி

NPB



# தி இந்தியன் பாங்க் லிட்.



## அவளுடைய பொக்கிஷம்

சூதக வியாதியிலிருந்து விடுதலையளித்து, புத்திர பாக்கியத்திற்கு உதவிய அருணா டானிக்கை தன் அருமைக் குழந்தையைப் போல் பொக்கிஷமாகவும், சாஸ்வதமாகவும் கருதுகிறாள்

பண்டிட் டி. கோபாலாசார்லுவின்

# அருணா

கர்ப்பாசயரோக நிவாரணி

**ஆயுர்வேதாஸ்ரமம் லிமிடெட், மதராஸ் 17.**

